Regd. No. 2976. ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor:* P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM.

# ஸ்ரீ ராமாநுஜன் 217

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

15—12—1966ல் வெளியிட்டது.

# ஸ்ரீ ராமாநுஜன் — 217



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 19 | பராபவஹு தைமீத்திற்காக 10—12—1966-ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 1 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—பா. 93.

**வேய்மருதோ ளிந்திரைகோன் மேவுகின்ற தேசத்தை***
**தான்மருவாத் தன்மையினால்* தன்னையின்னம்—பூமியிலே**
**வைக்குமெனச் சங்கித்து மால்தெளிவிக்கத் தெளிந்த***
**தக்கபுகழ் மாறனெங்கள் சார்வு.**

| | |
|---|---|
| வேய் மரு தோள் இந்திரை கோன் | மூங்கில் போன்ற தோள்களை யுடையளான பிராட்டிக்கு வல்லபனான எம்பெருமான் |
| மேவுகின்ற தேசத்தை | எழுந்தருளியிருக்குமிடத்தை |
| தான் மருவா தன்மையினால் | தாம் புகப்பெறாமையினாலே |
| தன்னை இன்னம் பூமியிலே வைக்கும் என சங்கித்து | தம்மை இன்னமும் இந்த ஸம்ஸாரத்திலேயே இட்டு வைப்பனோவென்று அதி சங்கை கொள்ள, |
| மால் தெளிவிக்க தெளிந்த | எம்பெருமான் தேற்றத் தேறின |
| தக்க புகழ் மாறன் | தகுதியான புகழையுடைய ரான ஆழ்வார் |
| எங்கள் சார்வு | எமக்குப் புகலாவர். |

* * *—பத்தாம்பத்தில் மூன்றுந்திருவாய்மொழியான *வேய் மரு தோளிணை மெலியுமாலோ* என்கிற பதிகத்தின் ஸாரார்த்த முணர்த்தும் பாசுரமிது. ஆழ்வார் கீழிரண்டு திருவாய்மொழிகளில் ப்ரீத்தபடி அப்போதே பரமபதம் சென்று சேர்ந்து அடிமை செய்யப் பெறாமையினாலே சிறிது கலங்கினார். 'பழையபடியே நமக்கு

ஸம்ஸாரத்திலிருப்பே சேஷித்து விடுகிறதோ?' என்று சங்கித்தார். ஈச்வரன் ஸ்வதந்தி ரனுகையாலே எதுவும் செய்யக்கூடுமன்றோ. அதையிட்டும் பிரகிருதி ஸம்பந்தத்தின் கொடுமையைக் கருதியும் இங்ஙனே அதிசங்கிக்க நேர்ந்தது. அவ்வதிசங்கையையும் எம்பெருமான் அதைப்போக்கித் தெளிவித்தபடியையும் *வேய் மரு தோளிணைப் பதிகத்திலருளிச்செய்தாரென்றதாயிற்று. இப்பதிகத்தில் இவ்வதிசங்கை காணவில்லையே யென்று சிலர் நினைக்கக்கூடும். கேண்மின். முகபேதத்தாலே இவ்வதிசங்கை வெளியிடப் பட்டுள்ளது. அதாவது–கண்ணபிரான் ஒரு படுக்கையிலே கூடவிருக்கச் செய்தே பசு மேய்க்கப் போகிற விடியற்காலம் வந்து அக்காலத்திற்கேற்ற குயில் மயில் முதலான வற்றினுடைய பாடலாடல் முதலான அடையாளங்களையும் காண்கையாலே அவற்றையே கொண்டு 'எம்பிரான் பசு மேய்க்கப் போகுன்' என்று அதிசங்கை பண்ணி நோவுபடுகிற இடைப் பெண்கள் பேச்சாலே அருளிச் செய்யப்பட்டுள்ளது *வேய் மரு தோளிணைப்பதிகம். ஆழ்வார் தமக்குண்டான அதிசங்கையையே ஆய்ச்சி களின் பேச்சாலே மறைத்துப் பேசினுரென்றும் அதற்கு இதுவே உள்ளுறை பொரு ளென்றும் கண்டறிந்து வியாக்கியானித்தருளினர் பூருவாசாரியர்கள். இதில் பத்தாவது பாட்டில் *செங்கனிவாயெங்களாயர் தேவே* என்றதின் சுவடறிந்து பூருவர்கள் நிர்வஹித் தருளினபடியைத் தழுவி "மால் தெளிவிக்கத் தெளிந்த" என்றருளிச் செய்யப்பட்டது.

# ஸ்ரீ ராமாநுஜனுக்குப் பத்தொன்பதாம்பிராயப் பிறப்பு.

அன்பார்ந்த ஆரியர்காள்! சென்ற விதழில் ஸ்ரீ ராமாநுஜன் பதினெண்பிராயப் பூர்த்தியை யறிவித்துள்ளோம். பத்தொன்பதாம் பிராயம் தலைகாட்ட நின்றது. எம்பெருமானுடையவும் அவன்றன்னடியார்களுடையவும் அநுக்ரஹமேயடியாகத் தோன்றி அதனாலேயே குறையொன்றுமின்றி வளர்ந்து வருகின்ற ஸ்ரீ ராமாநுஜனுக்கு அவ்வநுக்ரஹ ஸம்பத்து மேன்மேலும் வளர்ந்து செல்லுமென்பதில் ஐயமில்லை. அதனை நம் எச்சில் வாயால் பிரார்த்திக்கவேண்டியதுண்டோ? இல்லையெனினும் புருஷார்த்த மாகைக்காக ப்ரார்த்திப்பதுஞ்செய்கிறோம்.

பல வருடங்களாகச் சந்தாத்தொகை செலுத்தாதவர்களுக்கும் அவரவர்களே அனுப்புவர்களென்கிற நம்பிக்கையினுல் நாம் பத்திரிகை நிறுத்தாமல் அனுப்பிவருகிறோம். 1966ஆம் வருஷத்திற்காகச் சந்தா செலுத்தியவர்களின் பெயர்களை 208 ந. ஸஞ்சிகை யிலிருந்து வெளியிட்டிருக்கிறோம். இந்த 217லும் இதன்கீழ் வெளியிடுகிறோம். சந்தா செலுத்தாத பெரியார்களுக்கு அடுத்த ஸஞ்சிகை முதற்கொண்டு நிறுத்தியாகுமென்பது திடமாக அறிந்துகொள்ளத் தக்கது. சந்தா செலுத்த ஸௌகரியமில்லாதவர்கள் தங்களுடைய அஸௌகரியத்தைத் தெரிவித்துவிடுவது நலம்.

## சந்தா செலுத்தியவர்கள் 215-ல் பிரசுரிக்கப்பட்டதன் தொடர்ச்சி

193. K. V. Raman, Triplicane
194. V. A. Iyengar, Bangalore
195. இளையாண்டபட்டு, பாலகிருஷ்ணப்பிள்ளை
196. ஸ்ரீபெரும்பூதூர், கோவிந்தசாமிப்பிள்ளை
197. V. ராஜகோபாலப்பிள்ளை, தென்பாதி
198. R. G. P. தாமோதரம், சித்தூர்
199. K. P. சந்திரகாசன், ஈரோடு
200. Rtd. Judge Samayyangar, Bangalore
201. V. K. Chakravarthi, Poona
202. A. N. Srinivasagupta, Salem
203. பெரியண்ணரங்கநாதன், மணச்சநல்லூர்
204. Rtd., Subregistrar Veeraraghavulu, Chingleput
205. A. K. Rangachariar, Pallavaram
206. கொப்புசெட்டிபட்டி, பொன்னம்மா
207. V. S. நாராயணையங்கார், தாடாளன் ஸன்னிதி
208. V. P. K. Charya, Perambur
209. அ கோபாலகிருஷ்ணன், வீரபாண்டி
210. ஸ்ரீஉ.வே. C. R. Ramaswami Iyengar, B.A., B.L., கோவை
211. கோம்பூர் ரங்கநாதாசாரியர், திருநின்றவூர்
212. D. L. வெங்கடாசாரியர், பவானி

## LETTERS

# சென்னை தியாகராயநகரில் வாழும் உயர்திருவாளர் மாஜி டெபுடி கலெக்டர் ஜி. எதிராஜுலு நாயுடு அவர்களின் கடிதம். 25-11-66

**ஸ்ரீமத் உபயவேதாந்த மஹாவித்வான், காஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளின் திருவடிகளைத் திக்குநோக்கித் தொழுது அடியேன் செய்யும் விண்ணப்பம். நம், P. B. A.** ஸ்வாமிகளின் உபன்யாஸங்களைக்கேட்டும், அரிய பெரிய நூல்களைப்படித்தும், பேரானந்தமும் பெறுதற்கரிய ஆதாயமும் பெற்றுவரும் ஆயிரக்கணக்கானவர்களில், அடியேனும் ஒருவன் என்பதை முதலில் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஸ்ரீ ராமாநுஜ தரிசன வளர்ச்சிக்கென்றே வாழ்க்கையை அர்ப்பணித்திருக்கும் நம் ஸ்வாமிகள் உலக க்ஷேமத்தைக்கோரி செய்துவரும் பலதரப்பட்ட ஸேவைகளில், 'ஸ்ரீ ராமாநுஜன்' பத்திரிகையை மாதம் தவறாது, பதினெட்டு வருஷகாலமாய் வெளியிட்டுவருவது ஒன்று, இப்பத்திரிகையில் ஸகல ஸத்விஷயங்களும், சாஸ்திரார்த்த விசேஷங்களும் ஸம்பிரதாய வழிமுறைகளும் நிரம்பியுள்ளன. ஸ்ரீ ராமாயணம், மஹாபாரதம், ஸ்ரீபாகவதம்—இவைகளில் உள்ள தத்துவங்கள், ஆழ்வார் ஆசாரியர்களின் வைபவங்கள், அருளிச்செயற்கடலில் திளைத்து ஸ்ரீ ஸ்வாமிகள் பெற்றிருக்கும் ஞானபக்தி அனுபவங்கள், திவ்யதேசங்களின் பெருமை மகிமைகள், பூர்வாசாரியர்களின் உபயவேதாந்த கிரந்தங்களின் ஸாராம்சங்கள்—இவைகளையெல்லாம், வாசிப்போர் மனத்தில் பேரின்பவெள்ளம் பெருகச்செய்யும் வகையில் புங்கானு புங்கமாய்ப் பொழிந்து வருவது உலகமறிந்தது.

இங்கு முக்கியமாய் இரண்டு விஷயங்களைப்பற்றி அடியேனுக்கு உண்டான குதூஹலத்தை உலகுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். ஸ்ரீ ராமானுஜனின் இருநூறு மாத பூர்த்தியை முன்னிட்டு **'உபன்யாஸ சதத்வயம்'** என்ற தலைப்பில் ஸ்வாமிகள் வெளியிட்ட வியாஸங்கள் இருநூறும் ஆங்காங்கு பிரவசனம் செய்யும் பண்டிதர்களுக்குப் பெரிதும்

பயன்படும்படி பலதரப்பட்ட விஷய நுட்பங்கள் அடங்கி, மனத்தை ஈர்க்கும் வகையில் அபூர்வமாய் அமைந்திருக்கின்றன: இவ்வுபன்யாஸ மாலையில், ஸமயப்பெரியார்களின் திருவுருவப்படங்களையும், காலக்ஷேப கோஷ்டிகளின் புகைப்படங்களையும் வெளியிட்டிருப்பது மிகவும் போற்றுதற்குரியசெயல். இம்மாலையை ஸ்வாமிகள் அநுக்கிரஹித்தது ஆஸ்திகர்கள் செய்த பாக்கியமே.

2. ஸ்ரீராமானுஜனின் பதினெட்டாவது பிராய ஆரம்பத்திற்கு ஞாபக சின்னமாக வெளியிட்டுவரும் "அஷ்டாதசமஹார்த்த நிதி" உண்மையில் பெறுதற்கரிய பேற்றைத் தரும் ஒரு மாபெரும் நிதியே; போற்றிக் கொண்டாடிச் சேமித்துவைக்கவேண்டிய ஞான பக்தி பொக்கிஷம். ஸ்ரீவசனபூஷணம், தத்வத்திரயம், முமுக்ஷுப்படி, ஆசாரிய ஹிருதயம் போன்ற கிரந்தங்களைப்படித்து கிரகிக்க முடியாதவர்களுக்கு, அவைகளிலுள்ள தத்துவங்களைக் கடைந்தெடுத்த வெண்ணெய்போல் திரட்டி, செவிக்கினிய வைஷ்ணவத்தமிழில் தேன்மாரியாகப் பொழிந்திருக்கிறார்கள் நம் ஸ்வாமிகள். பகவத்கடாக்ஷத்தால் ஸ்வாமிகள் செய்துவரும் இப்பேருதவிகட்கும் ஸ்ரீ வைஷ்ணவஸமூகம் என்ன கைம்மாறு செய்யும்? வசிகரமுகப்பொலிவுடன் மக்களின் மனத்தைக் கவரும்படி ஒப்பற்ற திறமையுடன் உபன்யாஸங்கள் செய்து, உபன்யாஸ சக்கிரவர்த்தியாய் விளங்கும் ஸ்வாமிகள், அபூர்வ சொல்லாட்சியும், அழகிய வசனநடையும் கொண்டு, தலைசிறந்த எழுத்தாளராகவும் திகழ்ந்து, பல நூற்றுக்கணக்கான நூல்கள் அருளியிருப்பது உலகம் செய்த புண்ணியமே என்னத்தட்டில்லை.

வைணவ சித்தாந்த பிரவசனத்திலும், வைணவ கிரந்த பிரசுரத்திலும், அர்ச்சா மூர்த்திகளின் திருமேனி அழகில் ஈடுபட்டுச்செய்யும் திருப்பணிகளிலும் ஒப்பாரும் மிக்காருமில்லாத சுவாமிகளை 'அவதார புருஷர்' என்று வடநாடும் தென்னாடும் போற்றுவதில் என்ன ஆச்சரியம்? எவ்வித சாஸ்திரவாதப்போரிலும் என்றும் வெற்றியே கண்டு வரும் நம் ஸ்வாமிகள், தவறுகண்டவிடத்தில் தாட்சிண்யமின்றிக் கண்டித்து, பின் சிறிதும் துவேஷமின்றி, தவறு செய்தவர்களின் குண நலனை சமயம் வந்தபோது பாராட்டுவது நம் சுவாமிகளுக்கே உரிய அற்புதமான பண்பு.

> "முன்னவராம் நம் குரவர் மொழிகள் உள்ளப் பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம், பின்னையொன்றுதனில் நெஞ்சு பேராமற் பெற்றோம் பிறர் மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும் பெற்றோமே."

என்றபடி, மணவாள மாமுனிகளைப்போல் வாழ்க்கைநடத்தி, ஸ்ரீராமானுஜ தரிசனம் செழித்தோங்க, அல்லும் பகலும் அனவரதமும் தொண்டு செய்துவரும் சுவாமிகள், திடகாத்திரத்துடனும் ஆரோக்கிய ஸம்பத்துடனும், பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்திருக்க வேண்டுமென்பது அடியேன் எம்பெருமானிடம் செய்துவரும் பிரார்த்தனை.

அடியேன்,

ஜி. எதிராஜுலு நாயுடு, மாஜி டெபுடி கலெக்டர் தியாகராயநகர்.

# ஸ்ரீஸூக்தி ரத்நாகர ஸ்ரீஸூக்தி ரத்னம்

ஆழ்வார் திருநகரி ஸ்ரீமதுபயவே இனையவில்லி சடகோபாசாரியஸ்வாமிக்குப் பலவாண்டுகட்கு முன்பு ஒரு ஸந்தர்ப்ப விசேஷத்தில் ஸ்ரீஸூக்தி ரத்நாகரமென்று விருது சூட்டியிருந்தேன். அந்த ஸ்வாமி அடியேனுடைய ஸம்பந்தியாதலால் ஸமய விசேஷங்களில் அவருடைய உபந்யாஸங்களைக் கேட்கப்பெறுவதுதவிர அடிக்கடி ஸ்ரீமுகங்களை ஸேவிக்கவும் நேருமாதலால், அந்த ஸ்ரீமுகங்களில் காணும் விலக்ஷண வாக்விந்யாஸ வைகரிகள் காரணமாகவே அந்த விருது சூட்ட ப்ராப்தமாயிற்று. அவருடைய சிலபல ஸ்ரீஸூக்திரத்னங்களை டேப் ரிகார்டு மூலமாகவும் உலகம் கேட்டுக்களித்து வருகின்றது. ஆனாலும் ஸமய விசேஷங்களில் அடியேனுக்குக் கிடைக்கும் ஸ்ரீமுகங்களிலிருந்து சில ரத்னங்களை உலகுக்கு உபஹரிக்கவேணுமென்கிற உத்கண்டை இப்போது ஸபலமாகிறது.

ஸமீப காலத்தில் வெளிவந்த ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரக்ரந்தமாலா ஸ்ரீகோசத்தை ஸ்வாமி பெற்றுக்கடாக்ஷித்து 26—11—66ல் திருவரங்கம் பெரிய கோயிலில் நின்றும் விடுத்தருளின ஸ்ரீமுகம் அடியேனுடைய ப்ரசம்ஸாப்ரசுரமாயிருந்தாலும், அதனை அடியேன் காணுக்கண்ணிட்டிருக்க வேண்டியிருந்தாலும் அந்த ஸ்ரீஸூக்தி ரத்னமாலையைப் பல ரஸிக விவேகி வித்வான்கள் அநுபவிக்கவேணுமென்கிற குதூஹலமொன்றுக்கே வசப்பட்டு அந்த ஸ்ரீமுகத்தை இங்குப் பிரசுரிக்கிறேன்.

★ ★ ★

"........விண்ணப்பம். உபயக்ஷேமம். ஸ்வாமியின் பரமக்ருபா பரீவாஹபலரூபமான ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரக்ரந்தமாலா ஸ்ரீகோசத்தைச் சென்னிக்கு மலர்ந்த பூவாகப் பெற்று அம்ருதஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவஸுகஸம்பந்நனாயிரா நின்றேன். இந்த ஸ்ரீகோசத்தின்மேல் கவசம் "துக்தோதந்வத் தவளமதுரம் சுத்தஸத்வைகரூபம் ரூபம் யஸ்ய ஸ்புடயதிதராம் யம் பணீந்த்ராவதாரம்" என்கிற சதக ஸ்ரீஸூக்தியை நினைப்பூட்டி *க்ஷீரஸங்காதகௌரம்* என்கிற மாமுனிகளின் திருமேனியொக்கும் யோகங்கள் பெற்றுத் திகழுமழகொன்றேயமையாதோ ? *மாநலத்தால் மாறன் திருவல்லவாழ்புகப்போய் உள்ளுப்புகமாட்டாதே நின்றநிலையடைவில் நெடும்போது கவசத்தையே கண்டு கொண்டிருக்க நேர்ந்து, பிறகு *ஒருவண்ணம் சென்று புக்கு* என்கிற திருவண்வண்டூர்ப் பாசுரரீதியிலே உள்ளேயும் கண்புகப்பெற்றது. மாமுனிகள் திருமேனி மிகத் தளர்ந் திருக்குங்காலத்தில் ஆசார்யஹ்ருதய வியாக்கியானமிட்டருளும்போது ஆப்தர்களான பரிவர்கள் 'இந்நிலையிலே இங்ஙனே சிரமங்கொள்ளவேணுமோ?' என்று கேட்க, ப்ரபந்ந ஸந்ததிகளுக்குச் செய்யவேண்டுங் காரியங்களில் சிரமத்தைக் கணிசிக்கப்போமோ? உங்களுக்கும், மற்றும் வரும் போக்தாக்களுக்கும் சிரமமுண்டாகாதிருக்க நான் சிறிது சிரமங்கொண்டாலென்னே? என்று மனமுருக அருளிச்செய்ததாக ப்ரஸித்தியுண்டே, அதனை மெய்ப்பித்தது இப்போது தேவரீர் கொண்ட பரிச்ரமம்.

மாமுனிகள் தம்முடைய திருவுள்ளத்திலே தேக்கிட்டுக்கிடந்த அர்த்த விசேஷங்களை ஓலையிலிட்டது, ஸர்வேச்வரன் *பஹுஸ்யாம்* என்று பஹுபவந ஸங்கல்பத்தாலே ஜகத்ஸ்ருஷ்டி பண்ணினதோடொக்கும். தேவரீர் கொண்ட இந்த

ச்ரமமோவென்னில், வ்யஷ்டிஸ்ருஷ்டியில் சதுர்முகன்படும் ச்ரமத்தோடொக்குமன்றோ. இந்த கார்யவிசேஷத்தில் ஸர்வசக்தனும் ஸ்வாமியுடன் போட்டியிட சக்தனல்லன். ஸ்ரீகோசம் அமைந்திருக்குமழகுதான் என்னே! பங்க்தியை ஸேவித்தால் முன்னுருச் சொல்லி நம்மைப் பின்னுருச் சொல்லவைத்து ஈர்த்துக்கொண்டு போமாப்போலே அநாயாஸமாக ஓடவைக்கிறது. விஷயங்களை நெஞ்சகம்பால் சுவர்வழி எழுதிவைக்கிறது. விசதவாக் சிகாமணித்வம் மாமுனிகளளவிலே நில்லாமல் முத்ரணப்ரகார வைகரிகளிலும் ஏறிப்பாய்ந்திருக்கிறபடி என்னேயென்னே! ஏற்கெனவே பலவாண்டுகட்கு முன்பு ஆந்த்ரலிபியில் இந்த க்ரந்தமாலையின் ரஹஸ்யவ்யாக்யானப் பகுதியை மட்டும் தேவரீர் வெளியிட்டருளினகாலத்து அந்த லிபியில் அநபிஜ்ஞர்கள்பட்ட வ்யஸனமெல்லாம் இப்போது அறவே தீர்ந்தது. இந்த பரிச்ரமத்துக்கு *க்ருத்ஸ்நாம் வா ப்ருதிவீம் தத்யாத் ந தத்துல்யம் கதஞ்சந* என்னவேண்டியிராநின்றது. *நான் ஒன்று நூறாயிரமாக் கொடுத்துப் பின்னுமாளுஞ்செய்வன்* என்னவேண்டிய தானமன்றோவிது. நூறு தடாவில் வெண்ணெயும், நூறு தடா நிறைந்த அக்காரவடிசிலும் *தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமாய் அதனிலும் விஞ்சியதுமான இந்த க்ரந்தமாலைக்கு ஏகதேசமேனும் ஈடாகுமோ? *அநாக்ராதாவத்யமாய் அநர்க்கமான இந்த க்ரந்தமாலையில் அர்த்தத்தினுட் புகாதே அக்ஷரராசி வீக்ஷணமொன்றேயே நிற்கவேண்டும்படியாகவன்றோவுள்ளது. குற்றமே கண்ணுகக் காண்பார்க்கும் குற்றமொன்றும் காணக்கிடைக்காதபடிக்கு அமைந்திருக்கிற சோதநாதி கார்ய கௌரவத்தைப் பற்றப் பேசத்தானுவதுண்டோ?

பட்டர் "லோகே த்வந்மஹிமாவபோதபதிரே" என்றருளிச் செய்தாப்போலே இத்திருப்பணியின் அருமையும் பெருமையும் அறிவாரில்லாத இம் மடவுலகத்திலே க்ருதஜ்ஞதை செலுத்தவுமறியாதார் பலரிருக்க, அடியேன் இந்த வாசிக வரிவஸ்யாமுகேந ஹார்த க்ருதஜ்ஞதையைச் செலுத்துவதனால் ஸத்தை பெறுகிறேன். உண்மையில் இதற்குக் கைம்மாறு செய்ய ஸர்வேச்வரனொருவன் சக்தனாகக்கூடும். அவன்றான் எவ்வித மான கைம்மாறு செய்யலாமென்றால், தேவரீர் சில வ்யக்தி விசேஷங்களை உத்தேசித்து "வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்கிற மங்களா சாஸனத்தை ப்ரயோகிப்பதுண்டே, அது தேவரீரளவிலே பலிக்கும்படி செய்தருள்வனேல் ஆளவந்தார் *பக்தஜநைகஜீவித மென்றதற்குமேல்* ஸமர்த்தமென்று ஸாதித்த ஸாமர்த்தியம் அவன்றனக்கு அந்வர்த்தமாகும்......" இந்த ஸ்ரீமுகம் இன்னமும் வளர்ந்து செல்லா நின்றது. அலமேதாவதா. ... ... ...

## மேலே உதாஹரித்த ஸ்ரீமுகத்திற்கு மாறான கடிதமொன்று.

ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலா ப்ரகாசநத்திற்கு அபிநந்தனமாகக் கிடைத்த கடிதங்களுள் விலக்ஷணமான கடிதமுமொன்றுண்டு: இது யாரெழுதினது? எங்கிருந்து வந்தது? என்பவற்றை விவரிக்க மனமில்லை. விஷயத்தை மட்டும் விளக்குகிறேன். முமுக்ஷுப்படி முதலான நான்கு ரஹஸ்யங்களின் மூலத்திலும் வியாக்யானத்திலும் ப்ரஸ்தாவிக்கப்பட்டுள்ள ஆசாரியர்களின் திருநாமங்களை அடியேன் முகவுரையில் (பக்கம் 4ல்) ஆளவந்தார் தொடங்கி வாதிகேஸரி ஜீயரளவாக விளக்கியிருக்கிறேன். அந்தத் திருநாமச்ரேணியில் உடையவர்காலத்து உய்யக்கொண்டாரை (9. லக்கத்தில்)

குறிப்பிட்டிருக்கிறேன். விவரணத்தில் மூமுக்ஷுப்படி முடிவில்* உய்யக்கொண்டாருக்கு உடையவரருளிச் செய்ததாக ஓரிடமும், ஸ்ரீவசநபூஷணத்தில் (3ல்) அவருடைய வசனோதாஹரணம் ஓரிடமும் ஆக இரண்டிடமே காட்டியுள்ளேன். ப்ரக்ருதம் அடியேனுக்குக் கடிதமெழுதினவராக நிர்தேசிக்கப்பட்டவர் உய்யக்கொண்டாரைப்பற்றி மூன்றாவதாக ஓரிடமிருப்பதாகவும் அதை அடியேன் விட்டுவிட்டதாகவுங் காட்டியுள்ளார். அதாவது, ஆசார்யஹ்ருதயம் மூன்றும் பிரகரணத்தில் (சூர்ணை. 205.) “க்க்யாதிலாபபூஜாபேக்ஷையற மலர்நாடி யாட்செய்ய உய்யக்கொண்டாரைக் கொண்டு வாளும் வில்லுங்கொண்டென்கிற இழவுகள் தீரப்பெற்றது” என்றுள்ளவிடத்தை யெடுத்தெழுதி “இங்கு உய்யக்கொண்டாரை ஸ்பஷ்டமாக நிர்தேசித்திருக்கிறதே; இதைக் குறிப்பிடாமல் விட்டிட்ட காரணம் தெரியவில்லை; இவர் உடையவர்காலத்து உய்யக்கொண்டாரா? அல்லது நாதமுனிகளின் சிஷ்யரான உய்யக்கொண்டாரா? என்பதையும் விளக்கவில்லை. வியாக்கியானத்திலும் இது விளங்கவில்லை; ஸ்ரீ ராமாநுஜன் மூலமாகவாவது இதை விளக்கினால் மஹோபகாரமாகும்” என்றெழுதியிருக்கின்றார். இவர்க்கு ஆசார்ய ஹ்ருதயமூலம் கண்டபாடமென்று தெரியவருகிறது. ஆனால் .....இதற்குமேல் என்ன எழுதுவேன். “உளைக்கன்றேபோல நோக்கமுடையவர் வலையுள்பட்டு” என்கிற திருமாலைப்பாசுரத்தில் உடையவருடைய ப்ரஸ்தாவமுள்ளதென்றும், “இணங்குதிருச் சக்கரத் தெம்பெருமானார்க்கிடம்” என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தில் எம்பெருமானாருடைய ப்ரஸ்தாவமுள்ளதென்றும் சொல்லுமவர்களையே இங்கு நாம் நினைக்கவேண்டியதாகிறது. மேலே யெடுத்த ஆசார்யஹ்ருதய சூர்ணையில் உய்யக்கொண்டார் விவக்ஷிதரல்லர். “உய்யக்கொண்டு ஆரைக்கொண்டு வாளும் வில்லுங்கொண்டு என்கிற இழவுகள் தீரப்பெற்றது” என்று பிரித்து அநுஸந்திப்பர் பெரியோர். “உய்யக்கொண்டு ஆரைக்கொண்டு” என்பவற்றைச் சந்திசெய்து ‘உய்யக்கொண்டாரைக் கொண்டு’ என்று சந்தை சொல்லிச் சிந்தனை செய்ததனால் வந்த விபரீதவுணர்ச்சியிது. ஆழ்வார் தம்முடைய உபதேசத்தினால் மூன்று இழவுகள் தீரப்பெற்றாரென்று இங்கு அற்புதமாக அருளிச் செய்யப்படும் விஷயம். (1) “திருக்குருகூரதனை உளங்கொள் ஞானத்து வைம்மின் உம்மை உய்யக்கொண்டு போகுறிலே” என்கிற பாசுரத்தை நோக்குமிடத்தில் ஸம்ஸாரிகள் உஜ்ஜீவிக்கப்பெறவில்லையே யென்கிற இழவு ஆழ்வார்க்கு இருந்ததாகத் தெரியவருகின்றது. “இழந்த வெம்மாமைத் திறத்துப்போன என்னெஞ்சினாருமங்கே யொழிந்தார், உழந்தினி ஆரைக்கொண்டு என்னுசாகோ?” என்கிற பாசுரத்தை நோக்குமிடத்து தமக்கு உசாத்துணையாவாரில்லாமையினாலாகிய இழவு தெரியவருகின்றது. “ஆளுமாளார் ஆழியுஞ் சங்குஞ் சுமப்பார்தாம், வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வார் மற்றில்லை” என்கிற பாசுரத்தை நோக்குமிடத்து எம்பெருமானுடைய ஸௌகுமார்ய மறிந்து பரிகைக்கு ஒருவருமில்லையே யென்கிற இழவு இருந்தமை தெரியவருகின்றது. இம் மூன்றிழவுகளையும் முறையே தெரிவிக்கிற சந்தைகள் [உய்யக்கொண்டு—ஆரைக் கொண்டு—வாளும் வில்லுங்கொண்டு] என்கிறவிவை. இவ்விழவுகள் ஆழ்வாருடைய உபதேசத்தினால் தீரப்பெற்றன. (அதாவது) ஆழ்வாருடைய உபதேசத்தின் பலனாக ஸம்ஸாரிகளெல்லாரு முஜ்ஜீவித்து, தமக்கு உசாத்துணைவரும் கிடைத்து, எம்பெருமானுக்கு மங்களாசாஸன பரர்களும் வாய்த்தனர் என்கை. ஆக இவ்விடத்தில் உய்யக்கொண்டார் ப்ரஸ்தாவம் ஸர்வாத்மநா அப்ரஸக்தமென்று தெளிவிக்கப்பட்டதாயிற்று. ❁

# ஸந்தேஹ பரிஹாரம்.

ஸ்ரீ ராமாநுஜன் சென்றவிதழில் (216ல்) பக்கம் 6ல், திருக்குறுங்குடி திரு. ஜீயர் மடம் ஸ்ரீகார்ய ஸ்வாமியின் ஸந்தேஹமொன்று வெளியிடப்பட்டிருந்தது. "கெருடாழ்வான் தனது மூக்கில் ஒரு வடவிருக்ஷத்தின் முறிந்த கிளையைக் கௌவிக்கொண்டும், வலது திருக்கையில் ஒரு யானையையும் இடது திருக்கையில் ஒரு கூர்மத்தையும் தூக்கிக் கொண்டு செல்லுகிறபடி; முறிந்த கிளையில் நான்கு ரிஷிகள் தலைகீழாகத் தொங்கிக் கொண்டிருக்கிறார்கள்; கீழே ஜலாசயமொன்றிருக்கிறது. பக்கத்தில் ஒரு வடவிருக்ஷம் நிற்கிறது. இவ்விதமாகக் கல்லில் செதுக்கியுள்ள பிம்பம் திருக்குறுங்குடியில் இருப்பதாகக் குறிப்பிட்டு இந்த ஸந்நிவேசத்தின் விவரணம் ஜிஜ்ஞாஸிதமாக வெளியிடப்பட்டுள்ளது. இதைப்பற்றிச் சில பெரியார்கள் விவரணம் தெரிவித்துள்ளார்கள். (1) ஸ்ரீமதுபயவே. ந்யாய வேதாந்த வித்வான், அக்காரக்கனி, தி. அ. ஸம்பத்குமாராசாரியர்ஸ்வாமி (M.A), (2) சென்னை மாம்பலத்தில் வாழும் ப்ரஹ்மஸ்ரீ. பண்டிதப்ரகாண்ட, ஸ்ரீவத்ஸ ஸோமதேவசர்மா அவர்களின் புத்ரரத்னம், ஜயராமசர்மா, (3) ஸ்ரீரங்கம், ஸ்ரீஉ.வே, திருமஞ்சனம், ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமி, (4) ஸ்ரீரங்கம், மணவாளமாமுனிகள் ஸந்நிதி ஆதீனம், கோமடம் ஸம்பத்குமாராசாரியர்ஸ்வாமி, (5) ஒப்பிலியப்பன் ஸந்நிதி, வித்வச் சிரோமணி நவநீதம் ஸ்ரீராமதேசிகாசார்ய ஸ்வாமியின் புத்ரரத்னம் ஸ்ரீ கோபாலதேசிகாசாரி ஆகிய இவர்கள் மேலே குறித்த வரலாற்றுக்கு ஆகரம் காட்டிக் கடிதங்களெழுதியுள்ளார்கள். இவர்களுள் கோபாலதேசிகாசாரி யொருவர்மட்டும் ஸ்ரீமந் நிகமாந்தமஹாகுரு ப்ரணீதமான கருடபஞ்சாசத்தில் பதினெட்டாவது சுலோகம் *ஸாங்க்ரக்ரோதாநுபந்தாத்* இத்யாதியை யெடுத்துக்காட்டி—"ஸந்தேஹ ப்ரகாசக ஸ்வாமி குறித்தவையெல்லாம் இதில் வருகின்றன; தடாகம், வ்ருக்ஷம், கூர்மம், யானை ஆகிய இவற்றின் நிர்தேசமுள்ளது. தலைகீழாகத்தொங்கும் ரிஷிகளைப்பற்றி இந்த சுலோகத்தில் இல்லை. அவர்கள் வாலகில்யர்களாக இருக்கலாமென்று தோன்றுகிறது." என்று எழுதியுள்ளார். மற்ற வித்வான்கள்—மஹாபாரதம் ஆதிபர்வாவில் கருடஜனனம் விஸ்தாரமாகக் கூறப்படுமிடத்தில் 29, 30 அத்யாயங்களையும், ஸ்ரீ ராமாயணம் ஆரண்ய காண்டம் முப்பத்தைந்தாவது ஸர்க்கத்தையும் விவரித்துக் காட்டியுள்ளார்கள். இதைப் பற்றி நாம் விரிவாக எழுத நினைத்திருக்கையில் ஸந்தேஹ ப்ரகாசகரான திருக்குறுங்குடி ஸ்ரீகார்ய துரந்தரஸ்வாமியிடமிருந்து ஸ்ரீமுகமொன்று கிடைத்தது; அதிலுள்ளதாவது, "அடியேனுடைய ஸந்தேஹத்தை ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகையில் பிரசுரித்ததனால் இரண்டொருவர் இதுபற்றி விளக்கங்கொடுத்துத் திருமடத்துக்கு நிருபம் விடுத்திருந்தார்கள். ஸ்ரீரங்கம், உ.வே, திருமஞ்சனம், T. R. ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமி இதுபற்றி விமர்சித்திருந்தார். மஹாபாரதம்— ஆதிபருவம்—வைநதேய விருத்தாந்தம் முதலியவைகளில் விஸ்தாரமான கதைகளை வாசித்து மகிழ்ந்தேன்"—என்று.

கருத்மான் தனது பிதாவான கச்யபரால் காட்டப்பட்ட ஏரியில் ஒரு யானையையும் ஆமையையும் தனக்கு ஆஹாரமாகக் கொள்ள அவைகளைத் தூக்கிக்கொண்டு (ரௌஹிணமென்னும்) ஒரு ஆலமரத்தின் கிளையிலுட்கார, அது முறிந்துவிழ, கிளையில் தொங்கிக் கொண்டிருந்த வாலகில்யர்களென்னும் மஹர்ஷிகளைக் காப்பாற்றுவதற்காகக் கிளையோடு பறந்தான்—என்கிற விருத்தாந்தத்தை (மேலே நிர்திஷ்டரான) ஜயதேவசர்மா விளக்கியுள்ளார். இப்பெரியார்களுக்கு நன்றி பாராட்டுகிறோம். (பத்ராதிபர்.) ...

# பூருவாசாரியர்களின் ஐகமத்யம்.

ஸ்ரீ ராமாநுஜன் தன்னுடைய பத்தொன்பதாவது பிராயத்தின் தொடக்கத்தில் முதன்முதலாக விஜ்ஞாபிப்பது இந்த ஐகமத்யவ்யாஸம். "ஸ்ரீ பாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும் அர்த்த விரோதமில்லை, வாக்ய யோஜநாபேதமேயுள்ளது: தேசகாலாவஸ்தா விசேஷங்களாலே வரும் அநுஷ்டாந வைஷம்யம் சாஸ்த்ராநுமதம்." என்கிறவிந்த ஸ்ரீஸூக்தியைப் பல பெரியார் கண்டபாடங் கொண்டிருப்பர்கள். இது எவ்வாசிரியருடைய ஸ்ரீஸூக்தி? எந்த நூலிலுள்ளது? என்பதை நினைவூட்டுகிறேன். ஸ்ரீ நிகமாந்தமஹாகுரு ரஹஸ்யக்ரந்தங்கள் எழுதத் தொடங்குகையில் முதன்முதலாகப் பணித்தது ஸம்ப்ரதாயபரிசுத்தியென்பது. அதில் நன்னடுவேயுள்ள ஸ்ரீஸூக்தியிது. எம்பெருமானார் தர்சனத்தில் வரும் ஆசார்யபரம்பரைகளில் ஒன்றிலும் அர்த்தவிரோதமில்லையென்று முந்துறமுன்னம் ஸாதித்தார்; 'அப்படி ஸாதிக்கலாமோ? அர்த்த பேதங்களடியாக அர்த்தவிரோதம் காணப்படுகிறதே' என்று சிலர் கேட்க; "அர்த்த பேதமென்றோ அர்த்தவிரோதமென்றோ கொள்ளலாகாது; வாக்யயோஜநா பேதமென்று கொள்ளக் கடவதத்தனை—என்று தலைக்கட்டினார். வஸ்துஸ்திதி இங்ஙனேயிருக்க, சிலர் விபரீத ப்ரசாரங்கள் பண்ணிப்போருவது அதிதராம் அநுசிதம் என்பதை நாம் பலகால் பலமுகமாக விவரித்திருக்கிறோம். அத்தகைய நம்முடைய நிரூபணங்களுக்கு முக்கியமான மூலம் மேலேயுதாஹரித்த ஸம்ப்ரதாயபரிசுத்தி ஸ்ரீஸூக்தியேயாகும். அங்ஙனே திடமாக ஸாதித்த ஸ்வாமியினுடைய ஸ்ரீஸூக்திகளை அந்நாள் தொடங்கி இந்நாள்வரை அநுஸ்யூத பரம்பரையாகக் கொணர்ந்து கேட்டவர்களும் கேட்பித்தவர்களும் இல்லாமையாலும், இடையிலே வந்து புகுந்து அஸதர்த்த ப்ரசாரங்கள் பண்ணுமவர்கள் மலிந்திருக்கையாலும் ஸம்ப்ரதாய க்ஷோபம் விரைகவே வளர்ந்திட்டது. மேன்மேலும் வளர்ந்தும் வருகின்றது இதில் விவேகிகளோடு அவிவேகிகளோடு வாசியில்லாதபடி "கதாநுகதிகோ லோக:" என்னும்படியான க்ரமமே ஓங்கி வருகின்றதந்தோ!

சில்லரை ரஹஸ்யங்களென்னப்படுகிற தேசிகரஹஸ்யங்களில் **ரஹஸ்யமாத்ருகை** யென்பது ஒரு சிறு ரஹஸ்யம். அதன் முடிவில் ஸ்வாமியின் ச்லோகம்—"ரஹஸ்ய மாத்ருகா லேயம் வேங்கடேச விபச்சிதா, விசுத்த தேசிகவதா ரங்கதாம்நி வ்யலிக்யத." என்றுள்ளது. இங்கே ஸ்வாமி தமக்கு "**விசுத்த தேசிகவதா**" என்கிற விசேஷணம் எதற்காக இட்டுக்கொள்ளவேணும். மத்யமதீபந்யாயேந (அதவா) ப்ராஸாத தீபந்யாயேந முன்னும் பின்னும் அந்வயிப்பதற்காக **ரங்கதாம்நி** என்பதை இடையிலேயிட்டு, "விசுத்த தேசிகவதா வ்யலிக்யத" என்றருளிச்செய்திருக்கையாலே, **ரங்கதாம்நி விசுத்த தேசிகவதா**—ஸ்ரீரங்கத்திற்கெழுந்தருளி அங்கே விசுத்த ஸம்ப்ரதாய நிஷ்டரான ஆசாரியரை அடிபணியப்பெற்றவராலே, **ரங்கதாம்நி வ்யலிக்யத**—(இந்த ரஹஸ்யம்) ஸ்ரீரங்கத்தில் எழுதப்பட்டது—என்பதாகச் சிலர் பொருள் கூறுவர். இங்கே விவேககுசலர்கள் ஆராய்ச்சி செய்யத்தக்கதாவது, ஸ்வாமி நிகமாந்தமஹாகுரு ஒன்றிரண்டு நூல்களருளிச் செய்தவரல்ல; பரச்சதப்ரபந்த ப்ரணேதாவாக ப்ரஸித்தர். ஸ்ரீரங்கத்திலும் காஞ்சியிலும் திருவஹீந்திரபுரத்திலும் மற்றும் பலவிடங்களிலும் எழுந்தருளியிருந்துகொண்டு பல பல நூல்களை யருளிச்செய்திருக்கிறார். இன்னவூரிலிருந்துகொண்டு இன்ன

நூலை யெழுதினேனென்று ஒன்றிலுமருளிச் செய்திருக்கவில்லை. ப்ரக்ருத ரஹஸ்யக்ரந்தம் மிகச்சிறிது; இரண்டு பக்கமேயுள்ளது. இந்தச் சிறுநூலுக்கு முன்னும்பின்னும் பல பெரிய நூல்களிருக்கின்றன. அவையெல்லாம் எவ்விடத்திலிருந்துகொண்டு எழுதப் பட்டனவோ அவ்விடத்திலிருந்துகொண்டே இச்சிறுநூலும் எழுதப்பட்டதென்பதில் யார்க்கும் ஸந்தேஹமோ விவாதமோ இராது.

பரமதபங்கமென்னும் ரஹஸ்யக்ரந்தம் மிகப்பெரிதும் மிகமுக்கியமுமானது. அது அருளிச்செய்தவிடம் வாய்ப்பாக அமைந்ததனால் "மாதவனூர் வடகொங்கில் வானி யாற்றின் வண்ணிகை நன்னடங்கண்டு மகிழ்ந்துவாழும்போது இவை நாம் பொன்ன யிந்தை நகரில் முன்னுள் புணராத பரமதப்போர் பூரித்தோமே." என்று அந்நூலின் முடிவில் செய்யுளிட்டுவைத்தது மிகப்பொருத்தம். இங்கு இதைப்பற்றின விரிவு அநபேக்ஷிதம். சுருக்கமாக வுண்மைச்செய்தி கேளீர். ஸ்வாமி நிகமாந்தமஹாகுரு திருவரங்கம் பெரிய கோயிலில், அக்காலத்தில் ஆசார்ய பதவியில் அமர்ந்து நல்லடிக் காலமென்னும்படி வாழ்ந்துகொண்டிருந்த நல்லாசிரியர்களின் திருவடிநிழலில் ஒதுங்கி வர்த்திக்கவேணுமென்கிற மநோரதத்துடனே அங்கேற எழுந்தருள, அப்போது அங்கு நிலைகுலைந்திருந்ததனால் வானியாற்றின் கரைக்கு எழுந்தருளி ஸ்ரீரங்கஸ்ரீ அநுபத்ரவமாக வேணுமென்று அருளிச்செய்த அபீதிஸ்தவத்தில் *நிரஸ்தரிபுஸம்பவே க்வசந ரங்கமுக்ய விபோ! பரஸ்பரஹிதைஷிணாம் பரிஸரேஷு மாம் வர்த்தய* என்று, [கோயிலில் விரோதி வர்க்க க்ஷயமுண்டாகி, பரஸ்பரஹிதைஷிகளான மஹான்களின் நிழலிலே வாழ வைத்தருளவேணுமென்னை] என்று பிரார்த்தித்துக்கொண்டிருக்க, அந்த ப்ரார்த்தனை நிறைவேறி ஸ்ரீரங்கம் நிஷ்கண்டகமாகி அங்கேறவந்து சேர்ந்து, ஏற்கெனவே மநோரதித் திருந்தபடியே மஹான்களின் திருவடிநிழலிலே யொதுங்கி வாழ்ந்தார். இச்செய்தியை அப்போது அங்கே ஸ்வாமி தாம் அருளிச்செய்த பகவத்த்யாந ஸோபானத்தின் முடிவிலே "ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே வித்வத்ஸேவாவிமலமநஸா வேங்கடேசேந" என்று பொறித்துவைத்தார். இந்தச்லோகமும், "விசுத்த தேசிகவதா வேங்கடேசேந" என்கிற (கீழே காட்டிய) சுலோகமும் சேர்த்து அநுஸந்திக்கப் பட்டால் உண்மை விளங்கும். "ரங்காஸ்தாநே வித்வத்ஸேவாவிமலமநஸா" என்றதை ப்ராமாணிகர்கள் நெஞ்சில் புந:புநராவ்ருத்திபண்ணவேணும். "ஸ்ரீரங்கத்தில் வித்வான்களை யடிபணிந்து மனத்தூய்மைபெற்றே"னென்று அருளிச்செய்கிறார். 'ஸ்ரீரங்கத்தில் என்பதற்கு வித்வத்ஸேவேத்யாதியில் அந்வயமில்லை' என்று சிலர் வாதாடுவதுண்டு. அஃது எங்ஙனேயாயினுமாகுக. 'வித்வத்ஸேவாவிமலமநஸா' என்பதற்குப் பொருள் கூறியாக வேண்டும். ஸ்வாசார்யரான கிடாம்பியப்புள்ளாரைக் கருதி வித்வச்சப்தப்ரயோகம் பண்ணினாரென்றால் இதை ப்ராமாணிகர்கள் இசையக்கூடுமா? 'அவர் வித்வானல்லவோ' என்று கேட்டுவிடவேண்டா. அன்றியும், "வித்வத்ஸேவாரஸிகமநஸா" "வித்வத் ஸேவாஸுரபிமநஸா" "வித்வத்ஸேவாமஹிதமநஸா" இத்யாதிகளான பல ப்ரகாரங்களை விட்டு "வித்வத்ஸேவா **விமலமநஸா**" என்றருளியதை உற்றுநோக்கவேண்டாவா? நிஷ்கல்மஷ—நிஷ்களங்க பர்யாயமான விமலபதத்தை ப்ரயோகித்ததனால், மனத்தில் முன்பு ஏதோ களங்கமிருந்து கழிந்ததாக நன்கு விளங்கவில்லையா? (கீழே காட்டிய) **விசுத்த தேசிகவதா** என்ற ஸ்ரீஸூக்தி இதற்கு இணங்கியிருக்கவில்லையா? ஆத்மவஞ்சனை

யின்றிக்கே பார்க்கவேண்டாவா? பார்த்தால், அதிகரணஸாராவளியில் "பாஷ்யாதி க்ரந்தலேசோபி அவஹிதமநஸாம் ஐதமர்த்த்யம் பஜேத" என்று ஸ்வாமி தாமருளிச் செய்த கணக்கிலே இதுதான் பொருத்தமான பொருளென்று நடுநிலையாளரின் உள்ளம் கொள்ளாதா?

இந்த ப்ரஸங்கத்தை மிகச் சிறு விஷயமென்று விட்டிடுவோம். ஸ்வாமி தேசிகனுடைய ஸ்ரீஸூக்திகளின் ஸந்நிவேசமிருக்கும்படியை யாரும் அபலபிக்கமுடியாதே. ஸ்வாமி தம்முடைய பல க்ரந்தங்களில் பலபல அர்த்தங்களைப் பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளைத் தழுவியேயன்றோ அருளிச்செய்திருக்கிறார். இதை நாம் வழிப்போக்கு வார்த்தையாகவிடாமல் அபேத்ய நிரூபண பூர்வகமாகவன்றோ [ஸ்ரீ ராமாநுஜன் 213ல்] "பெரியவாச்சான்பிள்ளை ஸூக்திகளில் நிகமாந்தகுரு ப்ராவண்யம்" என்ற வியாஸத்தினால் மூதலித்திருக்கிறோம். உபயஸம்பிரதாயத்திலுமுள்ள பல மஹான்கள் அதைக் கடாக்ஷித்து "யுக்தமுக்தம்" "ஸம்ப்ரதிபந்நம் ஸுஷ்டு விலிகிதம்" என்கிறார்களேயொழிய, ஏறிட்டெழுதியதாக ஒருவரும் உரைத்திலர். உரைக்க இடமில்லையன்றோ. அந்த அடியேனுடைய வியாஸத்தை தமிழில் விசேஷபரிசயமில்லாத லௌகிகர்களும் குறிக்கொள்ளவேணுமென்கிற குதூஹலத்தினால், க்வாளியர் மஹாநகரத்தில் வாழும் ஸ்ரீமது பயவே. S. ஸத்யமூர்த்தி ஸ்வாமி ஆங்கிலப்படுத்தி யநுக்ரஹித்தபடியால் அஃது இங்கே பிரசுரிக்கப்படுகிறது. பெரியவாச்சான் பிள்ளையருளிய அர்த்தங்களிலே ஸ்வாமி தேசிகனுக்கு எவ்வளவு ஆதரம்! எவ்வளவு கௌரவம்! எவ்வளவு அபிநிவேசம்! என்பதை ஒவ்வொருவரும் எளிதிலுணரலாம். இவ்வுண்மை மனத்தில் பட்டிருந்தும் "ஸ்வாமி தேசிகன் நிகமபரிமளமருளிச்செய்து பெரியவாச்சான்பிள்ளைபோல்வாருடைய அபார்த்தங்களையெல்லாம் அகற்றிவிட்டார்" என்று ஓயாமல் சிலர் எழுதிக்கொண்டிருந்தால் இதற்கு ஏதேனும் அர்த்தமுண்டோ? மேலே ப்ரஸ்தாவித்த ஆங்கில வியாஸமிது காணீர்;—

# THE GLORIOUS IMPACT OF PERIAVACCHAN PILLAI ON VEDANTA DESIKAR.

**[ S. Satyamurthi Iyengar, Gwalior. ]**

Sri P. B. A. Swami has brought home to his numerous readers, time and again, in various contexts, that there was no cleavage in the Vaishnavite world, or, for the matter of that, any fissiparous tendency during the life-time of Vedanta Desikar and till about four hundred years thereafter. Any attempt to isolate Desikar from other contemporaneous savants and doyens like Periavacchan Pillai and deny their impact on him would be nothing short of a gross perversion of facts amounting to a grievous wrong done to Desikar himself by his so-called protaganists and votaries. The unbiassed student, who keeps himself aloof from the corrupting influence of the sub-sectarian virus, which has progressively permeated the life of a section during the last two centuries, can't

but discern Vedanta Desikar's adoration of Periavacchan Pillai's commentaries, as is evidenced by the assimilation and absorption of the ideas contained therein and their reproduction, in his own works. Periavacchan Pillai and Vadakku Thiruveedhi Pillai were the two great disciples of Nampillai, who studied under that renowned master and took down notes from his discourses. Vedanta Desikar could not possibly have had access to the commentaries brought out by Vadakku Thiruveedhi Pillai, but he seems to have drunk deep of the nectarine commentaries of Periavacchan Pillai which had already acquired immense fame and popularity.

Periavacchan Pillai worte an illuminating commentary on Sri Alavandar's 'Stotra Ratna' and Vedanta Desikar wrote another, some time later. Studying these two commentaries, side by side, one can't fail to notice the facile manner in which the latter has incorporated the salient and juicy points in the former. Nearly eighty per cent of the Sanskrit pramanas cited by Periavacchan Pillai have been drawn upon by Vedanta Desikar also. To begin with the very beginning, the phrase "Gnana-vairagya-rasaye" in the first Sloka would ordinarily mean the repository of 'Gnana' (knowledge), and 'Vairagya' (renunciation) and this was how Vedanta Desikar had interpreted this phrase in the first instance. Periavacchan Pillai, however, invoked the 'Bahuvreehi' compound and interpreted the phrase as meaning that Sri Nathamuni possessed heaps of Gnanas and Vairagyas. He has also justified the reference to heaps of the two abstract things, 'Gnana' and 'Vairagya' in the light of their components—the Lord's several attributes such as His form. contents, qualities etc., are comprehended by 'Gnana', while 'renunciation' has numerous targets of attack—the worldly possessions, the sensual pleasures, the vicious snares, temptations, distractions and so on. Vedanta Desikar has adopted this latter interpretation. *in toto*, in his commentary. The matter being in black and white, there is no room for any conjecture or controversy over this. Again, in the same Sloka, the phrase 'agadha-bhagavat-bhakti-sindhave' has been interpreted by Periavacchan Pillai as "Sree Nathamunigal possessed divine love which was the ocean itself personified," discarding the matter-of-course meaning (viz) "Nathamunigal was a veritable ocean of divine love and ecstacy". Taken in by the special interpretation of Periavacchan-pillai, Desikar has translated it, word for word, as "Bhaktim va sindhutvena roopayitva bhahuvreehih".

Proceeding on, the word "loke" in the 23rd Sloka—"Na ninditam karma tadasti *loke*" would, on the face of it, refer to the "common public", but Periavacchan Pillai has it that this refers to the Sastras, an interpretation which has found favour with Vedanta Desikar also, although the latter had initially

adopted the commonplace meaning, referred to earlier. Likewise, the twelve excellent traits of the Lord, mentioned in the Sloka (1)"Vasee Vadanyo gunavan ………", elaborated upon by Periavacchan-pillai in his commentary, have been handled by Vedanta Desikar in precisely the same manner. Further up, the preamble given by Periavacchan-pillai to Sloka 45 (2)"Achintya-divyadbhuta .." forms the basic material for Desikar, who has, in his Sanskrit version, elaborated on it. In the same Sloka, the phrase (3)"bhakta-janaika-jeevitam" has been interpreted by Periavacchan-pillai in two ways (viz) (i) The Lord is the sole sustainer of His devotees; and (ii) The Lord holds His devotees in such great esteem and affection that He feels like being sustained by them. Vedanta Desikar has fallen in line with Periavacchan-pillai, here also. Coming to the word (4)"Samartham" in this very Sloka, Periavacchan-pillai, (in his eagerness to prove the extraordinary sagacity of the supreme Lord, in contradistinction to that displayed by the rest of us,) seems to have entered right into the spirit of Alavandar and interpreted the word in question, as follows—"The Lord, whose personal charm and grandeur are being enjoyed by the insatiable 'Nitya Suris' (the Eternal Heroes, who dwell in the High Heavens) all the time, has the unique wisdom or capacity of not opening up the flood-gate all at once, but revealing His resplendence to us, the 'Nitya Samsaris' on this side of the Heavens, gradually, step by step, by slow degrees, so as to enable the frail human beings with their limited capacity, to stomach it all right, without being swept off. Keeping in view these scintillating lines of Periavacchan-pillai's commentary, Vedanta Desikar has faithfully rendered them in Sanskrit, in his commentary, as (5)"Asritanam *Satmya*bhoga-pradane". The word underlined is not much in vogue in Sanskrit diction, though found in Charaka, Susrutha-Samhitas, but it has been freely used by our Acharyas. In his preamble (twenty-four thousand granthas) to the ninth decad, first centum of Thiruvoimozhi, Periavacchan-pillai had already referred to this particular aspect and Vedanta Desikar also repeated and reinforced it in his 'Dramidopanishad-Tatparya-Ratnavali'.

In the second section of his 'Saccharitra-Raksha,' purporting to be a dissertation on 'Oordhva Pundram' (Caste-mark worn on the forehead), Vedanta Desikar has dwelt on the meaning of stanza 6 of the fifth decad in the fourth centum of "Thiruvoimozhi" and written—(6) "Chakshushi tatdharanam tatra vihitamithi anjana-paratvamahur*acharyah*". Here, the word "acharyah" refers unmistakably and undeniably to Periavacchan-pillai. Those, who wish

(1) "வசீ வதாந்யோ குணவாந்" (2) "அசிந்த்ய திவ்யாத்புத." (3) "பக்தஜநைகஜீவிதம்." (4) "ஸமர்த்தம்." (5) "ஆச்ரிதாநாம் ஸாத்ம்யபோகப்ரதாநே" (6) "சக்ஷுஷி தத்தாரணம் தத்ர விஹிதமிதி அஞ்ஜநபரத்வமாஹுராசார்யா:".

to get at the 'why' and 'wherefore' of such a confident assertion, are invited to go through the whole gamut of the commentaries for the stanza, referred to above. It will be seen that, in Pillan's commentary (6000 granthas), the expression (1)"Velia neeru" in the said stanza has been taken to describe the (2) 'Anga-raga' or the sandal paste applied to the Lord's person, while Periavacchan Pillai and all the other commentators have taken it to mean the collyrium powder applied to the rims of the eyes. As Desikar has specifically stated (3)"Acharya ahuh" instead of (4)"Kechit ahuh", it is obvious that he has acknowledged the lead given by the Acharyas, who came in the foot-steps of the famous Nampillai. It doesn't call for any special effort to realise this and all that is needed is a dispassionate study, shorn of all petty jealousies and sectarian rancour.

It will be admitted on all hands that Vedanta Desikar studied the Ubhaya Vedantas under appropriate Acharyas. At a time, when none of the five commentaries of 'Thiruvoimozhi' (6,000 granthas, 9,000 granthas, 12,000 granthas, 24,000 granthas and 36,000 granthas), now extant, had come into being, the text was studied by the Vaishnavites of yore under their respective Acharyas With the advent of the first of the aforesaid five commentaries, namely, Pillan's 6000 granthas the Kalakshepams (traditional learning at the feet of the Guru) were conducted with the help of that commentary. Then came the far more elaborate, lucid and juicy commentaries of Nanjeeyar (9000 granthas) and Periavacchan Pillai (24,000 granthas). Although the Eadu (thirty-six thousand granthas), by far the most expansive and exquisite commentary, had taken birth by then, it wasn't in vogue till much later, due to want of proper publicity. During that interval, the study of 'Thiruvoimozhi' was, therefore, carried on with the help of Periavacchan Pillai's twentyfour thousand grantha commentary only. Desikar and others should have had recourse to this particular commentary only, for an adequate appreciation of "Thiruvoimozhi". In saying this, it is not meant to cast any aspersion on, or belittle the importance of the earliest commentary of Pillan. What is sought to be emphasised is that Desikar should have, after studying the brief commentary of Pillan, passed on to the far more elaborate, interesting and informative commentary of Periavacchan Pillai. Even the preambles to the eighth and tenth decads of the first centum (5) (Odum pulleri and Poruma neelhpadai), the eighth decad of the second centum (6) (Anaivadaravanai mel) etc., have been differently worded in these two commentaries. Vedanta Desikar having

(1) வெளியநீறு. (2) அங்கராக. (3) ஆசார்யா ஆஹு:. (4) கேசித் ஆஹு:. (5) *ஓடும் புள்ளேறி.* (6) *அணைவதரவணை மேல்.

adopted the text of Periavacchan Pillai's commentaries and followed it closely in his 'Dramidopanishat-tatparya-Ratnavali' and 'Dramidopanishat-Saram', no further proof seems necessary to substantiate his predilections.

The first decad of the tenth centum of "Thiruvoimozhi" talks of the glory of the Deity enshrined in Thirumohoor. a pilgrim centre, close to Madurai (Madras State). In his preamble to this decad, Pillan has merely stated: "The Azhvar having sung the glory of the Deity at Thirukkannapuram in the immediately preceding decad, now proceeds to sing, in praise of the Lord at Thirumohoor'. In the commentaries for the stanzas in this decad, Pillan hasn't said anything beyond giving out the bare meanings. All the other Acharyas associated with Nampillai have, however, brought into focus the fact that in the preceding decad, the Azhvar had (i) assured himself that all those who sought refuge in the Deity at Thirukkannapuram were sure to be lifted up to the High Heavens, and envisaged the exhilarating route to the Heavens, famitiarly known as 'Arcchiradi marga', and (ii) he now looks upon the Deity at Thirumohoor as his prop and guide during his ascent to the Heavens. This has been prominently brought out in Manavala Mamunigal's "Thiruvoimozhi Nootrandadi", every stanza of which is an admirable epitome of each decad of 'Thiruvoimozhi'. In Alagiya-manavala-perumal nayanar's 'Acharya Hirdayam' reference has been made to Kalamega Perumal, The Deity of Thirumohoor, as 'Margabandhu'. This has been transplanted, *in toto*, by Vedanta Desikar, in his 'Dramidopanishat-tatparya-Ratnavali' and 'Dramidopanishat Saram' as: (1) "Srantiharitva-mukhyairakarais *Satgatis syath*" and (2) "*Satpadavyam sahayam*. Srisam praha", respectively. (2) above is a glossary for (1).

It has been mentioned in a work known as "Varthamala" that in reply to an enquiry made by a pundit as to why there is no mention in the whole of Bhagavat Gita about the iconic representation of God (Arcchavatar), Nampillai pointed out that the Sloka—(3)"Ye yatha mam prapadyante tan tathaiva bhajamyaham" - in the IV chapter could well refer to the Arcchavatar also. Not only that: the fourth stanza in the first decad of the eighth centum of Thiruvoimozhi has been interpreted by Nampillai as pertaining to Arcchavatar, drawing support from this very Gita Sloka. This has been brought out succinctly in both Periavacchan Pillai's commentary and 'Eadu' (thirty-six thousand). This has been echoed by Vedanta Desika in "Tatparya

(1) "சாந்திஹாரித்வ முக்க்யைராகாரைஸ் ஸத்கதிஸ் ஸ்யாத்." (2) "ஸத்பதவ்யாம் ஸஹாயம் ஸ்ரீசம் ப்ராஹ". (3) "யே யதா மாம் ப்ரபத்யந்தே தாந் ததைவ பஜாம்யஹம்."

Chandrika" as (1) "Atra Krishnavatara-vruttantena saha arcchavatara-vruttantopi sangruheetah", although, the Gita-Bhashya itself gives no clue to such an interpretation.

Even more interesting is a report that while delving into the beauty of a stanza in Andal's "Natchiar Thirumozhi" during the course of his discourse Nampillai observed. with reference to the letter 'Cha' in the Gita Sloka (2) "Priyohi gnaninotyartham aham sa cha mama priyah", as follows: The Lord feels agitated and says "Shall I be doing anything big (of note and importance) if I just reciprocated the love shown to me by the Gnani?"

Vedanta Desika. who got to know about this, wrote in his "Tatparya Chandrika" at the end of this particular Gita Sloka as (3) "Sa cha mama priya ityatra niratisayapreetim kurvathopi mahodarasya Easvarsyapi tatpreetyu-padhika-preeti-karanat atrupthis soochiteti *kechidacharyah*". His sense of devotion in using the phrase (4) "kechidacharyah" instead of merely (5) "kechidahuh" is noteworthy.

Some people might stil be tempted to cling to the last straw. by arguing that Vedanta Desikar had no access to Periavacchan Pillai's works. But, let them understand with certainty that the great Pillai's works had a very wide circulation during Desikar's time. In fact the latter has quoted the former's very words in his Rahasyatrayasara, Prabhava-vyavastha-adhikara.

> "குலந்தருமென்கிற பாட்டுக்கு வியாக்கியானம் பண்ணின அபியுக்தரும் 'ஜன்மத்தால் வ்ருத்தத்தால் குறைந்தானொருத்தனுக்கு பகவத் ஸம்பந்தமுண்டானால் அவனை இவையுடையானொருத்தன் தாழ நினைக்கக் கூசவேண்டும்படியாயிற்று பகவத்ப்ரபாவமிருக்கும்படி. ஆனால் அவர்களோடு பெண்கொடுத்துக் கொள்ளு கிறதில்லையேயென்னில் அது ஜாதி நிபந்தனம், ச்லாகை குண நிபந்தனம்' என்று நிஷ்கர்ஷித்தார்கள்."

The word Abhiyukthar, literally means the respected one. and refers, in this connection to Periavacchan Pillai, because the lines quoted are found in his work. Sri Injimedu Alagiya Singar Swami has specifically written that Abhiyukthar refers to Periavacchan Pillai. Therefore it is beyond doubt that Periavacchan Pillai lived much before Desikar and that his works were widely circulated and reverentially studied by all, including Desikar.

---

(1) "அத்ர க்ருஷ்ணாவதாரவ்ருத்தாந்தேந ஸஹ அர்ச்சாவதாரவ்ருத்தாந்தோபி ஸங்க்ருஹீத:" (2) "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய:." (3) "ஸ ச மம ப்ரிய இத்யத்ர நிரதிசயப்ரீதிம் குர்வதோபி மஹோதாரஸ்ய ஈச்வரஸ்யாபி தத்ப்ரீத்யுபாதிக ப்ரீதிகாரணாத் அத்ருப்திஸ் ஸூசிதேதி கேசிதாசார்யா:." (4) கேசித் ஆசார்யா:. (5) கேசித் ஆஹு:.

அன்பர்களே! இந்த ஆங்கில வியாஸமானது ஸ்ரீராமாநுஜன் 213ல் வெளிவந்த "பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீ ஸூக்திகளில் நிகமாந்தகுருவின் ப்ராவண்யம்" என்கிற நமது வியாஸத்தின் ஸாராம்சத்தை விளக்குவதென்று முகப்பிலேயே தெரிவிக்கப்பட்டுள்ளது. இந்த ஆங்கில வியாஸத்தை வாசிக்கும்போது இதற்கு மூலமான அந்தத்தமிழ் வியாஸத்தையெடுத்து வாசித்தால் விஷயம் மனத்தில் நன்கு பதியும். அந்த ஸஞ்சிகையைத் தேடவேண்டிய சிரமமில்லாதபடி மூலமான விஷயங்களை ஈண்டு நாமே விளக்கமாக வரைந்திடுவோம். உபயவேதாந்த ரஹஸ்யார்த்தங்களை நம்பிள்ளை பக்கலில் நேராகக் கேட்டுப் பட்டோலை கொண்டவர்கள் பெரியவாச்சான்பிள்ளையும் வடக்குத் திருவீதிப்பிள்ளையுமான இருவர். இவர்களுள் வடக்குத் திருவீதிப்பிள்ளை யிட்டருளின வியாக்கியானங்கள் தேசிகர்க்குக் கிடைக்க ப்ரஸக்தியில்லாமலிருந்தது; பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்களத்தனையும் இவர் காலத்தில் விசேஷ ப்ரசாரமடைந்திருந்தபடியால் அவற்றை 'அமுதினுமாற்ற வினிது' என்கிற ப்ரதிபத்தியுடன் பருகிக் களித்தவர்களில் தலைவராகவேயிருந்தார் தேசிகர். இதற்கு எண்ணிறந்த சான்றுகளுண்டு. சிலவற்றை இங்குக் காட்டுகிறேன். த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவலி யருளிச்செய்தபோது பெரியவாச்சான் பிள்ளையின் இருபத்துநாலாயிரப்படியையே தழுவிப் பெரும்பாலுமருளிச் செய்திருக்கிறாரென்பது அவிசால்யமாக ஸஸாக்ஷிகமாய்ப் பலகால் நிரூபிக்கப்பட்டது. இங்கும் மேலே நிரூபிக்கப்படும்.

## ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஐந்து இடங்கள் காட்டுதல்.

ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஒவ்வொரு ச்லோகத்தின் பாஷ்யத்தையும் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தை உடன்கொண்டு ஸேவித்தால், அவருடைய வியாக்கியான ஸரணியை இவர் எவ்வளவு தழுவியிருக்கிறார் என்பது அநாயாஸமாக விளங்கும். ***நமோசிந்த்யாத்புத*** என்கிற முதல் ச்லோகத்திலிருந்தே பார்க்கலாம். பெரியவாச்சான் பிள்ளை உதாஹரித்தருளுகிற ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களை நூற்றுக்கு எண்பது பங்கு விடுவதில்லை தேசிகன். இது அநுமாநமன்று, உத்ப்ரேக்ஷையன்று, உல்லேகமன்று. இரண்டு ஸ்ரீகோசங்களும் ஸுலபமேயிறே துர்லபமன்றே, எடுத்துப் பரீக்ஷிக்கலாமே. ப்ரமாணங்களைக் கொள்வது மாத்திரமேயன்று, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திற் காணும் இன்சுவைமிக்க பொருள்களை அப்படியப்படியே தழுவிக்கொள்வதையும் காணலாம். இதற்கு நூறிடங்கள் எடுத்துக் காட்டலாம்; ஆயினும் விரிவு காண்பாரில்லாமையாலே இங்குச் சிலவிடங்களே காட்டப்படுகின்றன. முதல் ச்லோகத்தில் ***ஜ்ஞாந வைராக்யராசயே*** என்றவிடத்தில் **வாரிராசி:, ஜலராசி:** இத்யாதி ஸ்தலங்களிற் போல ஜ்ஞாநவைராக்யங்களுக்கு ராசியாயிருப்பவர் என்கிற பொருளே எல்லார்க்கும் தோன்றக்கூடியது. இது ஸங்கதமான பொருளேயன்றி அஸங்கதமான பொருளன்று. இவ்வகைப் பொருளை முந்துறப் பணித்தார் தேசிகன்; இங்கே பெரியவாச்சான்பிள்ளை பஹுவ்ரீஹியை விவக்ஷித்து, ராசியென்பதற்கு ஸமூஹப்பொருளைக் கொண்டு ஜ்ஞாந ஸமூஹங்களையும் வைராக்ய ஸமூஹங்களையுமுடையவர் என்றுரைத்து, ஜ்ஞாநமும் வைராக்யமும் ஒன்றாயிருக்க ராசியென்னலாமோவென்று சங்கித்துக்கொண்டு 'பகவத்

ஸ்வரூபாதிகள் ஜ்ஞான விஷயங்களாகையாலே பல; த்யாஜ்ய விஷயங்களும் பலவாகையாலே வைராக்யங்களும் பலவென்று சொல்லலாம்' என்று அருளிச் செய்திருக்கிறார். தேசிகன் பாஷ்யத்தில் இதை அப்படியே மொழி பெயர்த்திருக்கிறார். மேலே ***அகாத பகவத் பக்திஸிந்தவே*** என்றவிடத்திலும் பக்திக்குக் கடலாயிருப்பவர் என்று பொருள் கொள்ளாமல், ***காதல் கடல் புரைய விளைவித்த*** ***காதல் கடலின் மிகப்பெரிதால்*** இத்யாதி திவ்ய ஸூக்திகளுக்குச்சேர பக்தியைக் கடலாக ரூபித்து அகாதமான பகவத் பக்திஸிந்துவையுடையவர் என்று உரைத்தார் பெரியவாச்சான்பிள்ளை; தேசிகன் அதைத் தழுவி **"பக்திம் வா ஸிந்துத்வேந ரூபயித்வா பஹுவ்ரீஹி:"** என்று பணித்தார். ***ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே*** என்றவிடத்தில் **லோகே** என்பதற்கு (ஸம்ஸாரிஜநே) என்று முதலில் ஸாமாந்யமாகப் பொருள் பணித்த தேசிகன் (லோகே—சாஸ்திரத்தில்) என்றுள்ள பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை ஸேவித்து அப்படியேயருளிச்செய்தார். ***வசீ வதாந்யோ குணவாந்*** என்ற ச்லோகத்தில் அநுபவிக்கப்பட்ட பன்னிரண்டு திருக்குணங்களையும் விவரித்தருளாநின்ற தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தையே ப்ராயேண மொழிபெயர்த்திருக்கின்றார். சிறிது மேலே போவோம்; ***அசிந்த்யதிவ்யாத்புதேத்யாதி** ச்லோகத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை இட்டருளின அவதாரிகையையே சிறிது பெருக்கி மொழிபெயர்த்திருக்கிறார் தேசிகன். **பக்தஜநைக ஜீவிதம்** என்பதற்கு பக்தஜநங்களுக்கு தாரகாதிகளெல்லாம் தானேயாயிருக்குமவன் என்றும் பக்தஜனங்களையே தனக்கு தாரகமாகவுடையவன் என்றும் இரண்டுவிதமாகப் பொருள் பணித்தார் பெரியவாச்சான்பிள்ளை; தேசிகனும் அப்படியே பாஷ்யமிட்டருளினர். இதற்கு அடுத்தது ஸமர்த்தம் என்பது. இதற்கும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை யநுஸரித்தே பாஷ்யமுள்ளது. எம்பெருமானுக்கு ஸமர்த்தம் என்றல்லவோ இங்கு விசேஷணமுள்ளது. க்ஷுத்ரர்களான நாமெல்லாருங்கூட ஸமர்த்தர்களென்று கொண்டாடப்படுகிறோம். எம்பெருமானை ஸமர்த்தனென்றால் அவனுடைய ஸாமர்த்தியம் ஸாமாந்யமா யிருக்கமுடியாதே; இங்கு எவ்விதமான விசேஷத்தைக் காட்டலாமென்று விமர்சித்த பெரியவாச்சான்பிள்ளை ஆளவந்தாருடைய திருவுள்ளத்தை உள்ளபடி யுணர்ந்து தமது வியாக்கியானத்தில்—**"[ஸமர்த்தம்] அளவுடையரான நித்ய ஸூரிகள் அனுபவிக்கும் தன்னை நித்ய ஸம்ஸாரிகள் அநுபவிக்குமிடத்தில் *ஆற்றநல்ல வகை காட்டுமம்மானை* என்கிறபடியே ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்கும் ஸாமர்த்த்யத்தையுடைய"** என்றருளிச் செய்தார். உண்மையில் எம்பெருமானுக்கு இதுதான் அற்புதமான ஸாமர்த்தியம். இப்பங்க்தியை ஸேவித்த தேசிகன் இவ்வர்த்தத்தை மிகவும் ரஸித்து இதை அப்படியே மொழிபெயர்த்தவர்போல **"ஆச்ரிதாநாம் ஸாத்ம்யபோக ப்ரதாநே"** என்று அருளிச்செய்தார். **ஸாத்ம்ய** என்கிற ஸம்ஸ்க்ருதபதம் சிறிது அபூர்வமானது சரகஸுச்ருதாதிகளிலே கையாண்டது. நம் ஆசார்யர்களின் திவ்யக்ரந்தங்களில் தான் இந்த பதம் விசேஷமாகக் காணப்படும். திருவாய்மொழியில் (1—9.) **இவையுமவையுமுவையும்*** என்கிற பதிகத்தில் எம்பெருமான் ஆழ்வார்க்கு ஸ்வாநுபவத்தை ஸாத்மிக்க ஸாத்மிக்கக் கொடுத்தருளினதாகப் பெரியவாச்சான்பிள்ளை அவதாரிகையிட்டருளினர்; அதை யநுஸரித்து தேசிகன் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவலியில் **"விபுமநுபுபுஜே ஸாத்ம்ய போகப்ரதாநாத்"** என்றருளிச் செய்தார். அந்த ப்ரயோகத்தையே இங்கும் செய்தருளியுள்ளார். இனி வேறொரு நூலில் செல்வோம்.

## ஸச்சரித்ர ரக்ஷையில் மிகப்பெரிய விஷயமொன்று காட்டுதல்.

ஸச்சரித்ர ரக்ஷையில் ஊர்த்வபுண்ட்ர விசாரபரமான இரண்டாமதிகாரத்தில் *கரிய மேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும், பெரிய கோலத் தடங்கண்ணன் (4-5-6)* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தைப்பற்றி அர்த்தவிசாரம் செய்யப்புகுந்து “**சக்ஷுஷி தத்தாரணம் தத்ர விஹிதமிதி அஞ்ஜநபரத்வமாஹுராசார்யா:**” என்று எழுதியுள்ளார் தேசிகன். இங்கு **ஆசார்யா:** என்கிற சொல்லால் பெரியவாச்சான்பிள்ளையையே விவக்ஷிக்கிறாரென்பது அசைக்க முடியாதது. ஏன்? மேலேகுறித்த பாசுரத்திற்குப் பிள்ளானுடைய ஆறாயிரப்படி வியாக்கியானம்;—“நீலமேக நிபதிவ்ய ரூபோசித திவ்யாங்கராகத்தாலே அநுலிப்தனாய், அதிவிசாலமாயதிரமணீயமா யிருப்பதொரு தாமரைத் தடாகம்போலே யிருந்த திருக்கண்களையுடையனாய்” என்பது. இதனால், **வெளியநீறு** என்பதற்கு திவ்யாங்கராகமென்னும் பொருள் கொள்ளப் பட்டதென்பதும், ‘கரியமேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும்’ என்கிற முதலடியானது எம்பெருமானுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டதென்பதும் நன்கு விளங்கிற்று. பெரியவாச்சான்பிள்ளையினுடைய வியாக்கியானத்தில் அருளிச்செய்திருக்கும் விதமாவது பிள்ளானருளிச்செய்த விதத்திற் காட்டில் மிக வேறுபட்டது. ‘வெளிய நீறு’ என்பதற்கு அஞ்ஜந சூர்ணமென்று பொருள் கொள்ளப்பட்டது. [வெளியம்—அஞ்ஜனம்.] “கரியமேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும்’ என்கிற முதலடி எம்பெருமானுக்கு விசேஷணமாகக் கொள்ளப்படாமல் ‘பெரியகோலத் தடங்கண்ணன்’ என்றதன் ஏகதேசமான திருக்கண்களுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டது. ‘திருக்கண்களின் கரிய விழியினுடைய கறுத்த நிறத்தின் மேலே அஞ்ஜநசூர்ணத்தை யிடப்பெற்ற திருக்கண்களையுடையவன்’ என்னும் தாத்பரியம் பெரியவாச்சான்பிள்ளை முதலானோருடைய வியாக்கியானங்களில் மாத்திரம் காண்கிறது. பிள்ளானுடைய வியாக்கியானம் இதனில் மிக வேறுபட்டதென்பது புநருக்தம். “அஞ்ஜநபரத்வமாஹுராசார்யா:”* என்றெழுதிய தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை முதலானோரையே ஆசார்யராகச் சுட்டினாரென்பது நிஸ்ஸந்தேஹவிபர்யயம்: பிள்ளானுடைய வியாக்கியானத்தில் **நீறு** என்பதற்கு அஞ்ஜநபரத்வமும் கூறப்படவில்லை. சக்ஷுஷி தாரணமும் காட்டப்படவில்லையன்றோ. ஆறாயிரப்படியில் “திவ்யாங்கராகத்தாலே அநுலிப்தனாய்” என்கிற பங்க்தி ஸுஸ்பஷ்டமாயிருக்கையாலே **நீறு** என்பதற்கு அங்கராகப் பொருளும் அந்த அங்கராகத்தினால் திருமேனி அநுலிப்தமாயிருக்கிறதென்பதுமே பிள்ளானுடைய திருவுள்ளமாகத் தேறுகிறது. ஆக ஸச்சரித்ரரக்ஷையில் **ஆசார்யா ஆஹு:** என்று எடுத்துக்காட்டியிருக்கும் **விஷயம்** பிள்ளானுடைய படியில் இடையாதென்றும் நம்பிள்ளையின் பரம்பரையினருடைய வியாக்கியானங்களிலேயே உள்ளதென்றும் நிஸ்ஸந்தேஹமாகத் தேறுகின்றது. (கேசித் ஆஹு:) என்னாமல் **ஆசார்யா ஆஹு:** என்றெழுதி யிருக்கையாலே நம்பிள்ளை பரம்பரையில் வந்த மஹான்களையே தமக்கு ஆசார்யராகக்கொண்டு உஜ்ஜீவித்தவர் தேசிகன் என்கிற பரமார்த்தம் நிஷ்கல்மஷமாகத் தேறுகின்றது. மாச்சரியத்தை யகற்றி நடுநிலையில் நின்று காண்க.

## தாத்பர்யரத்நாவளியில் ரத்னங்கள் காட்டுதல்.

தேசிகன் உபயவேதாந்தத்தையும் குருமுகமாக அதிகரித்தவர் என்பது ஸர்வ ஸம்ப்ரதிபந்நம். திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானமும் அவதரியாதிருந்த காலத்துப்

பூர்வாசார்யர்கள் மூலத்தை வைத்துக்கொண்டே ஸ்வஸ்வாசார்யர்களிடத்தில் அர்த்த ச்ரவணம் பண்ணிவந்தார்கள். பிள்ளானுடைய ஆறாயிரப்படி அவதரித்தபின்பு அக்காலத்திலுள்ளவர்கள் அதைக்கொண்டு காலக்ஷேபம் செய்திருப்பர்கள். நஞ்சீயருடைய ஒன்பதினாயிரப்படியும் சுருக்கம். பிறகு பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படி மிக விரிவாகவும் ரஸபரிபுஷ்டமாகவும் அவதரித்தபடியினாலே அக்காலத்திலிருந்தவர்கள் யாவரும் அந்த இருபத்துநாலாயிரப்படி கொண்டே காலக்ஷேபம் செய்து வந்தார்கள். அடுத்தபடியாக ஈடுமுப்பத்தாறாயிரப்படி அவதரித்திருந்தும் அது அக்காலத்தில் பிரசாரமடையாமல் பிறகு பிரசாரமடைந்தபடியினால் அந்த மத்யகாலத்தில் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமே தேசிகன் முதலானோர்க்கும் காலக்ஷேப க்ரந்தமாக விளங்கிற்று—என்னுமிது அளவுகடந்த ஸாக்ஷியங்களால் அவிசால்யமாகக் காட்டி நிருபிக்கப்பட்டிருக்கிறது. அந்த நிருபணங்கள் ஸாமாந்யப்ரஜ்ஞர்களின் புத்திக்கு அடியோடு எட்டமாட்டாதவை. (1-8.) ஓடும் புள்ளேறி. (1-10) பொருமா நீள்படை. (2-8) அணைவதரவணைமேல்......இவை முதலான தசகங்களுக்கு ஆறாயிரப்படியிலுள்ள அவதாரிகைகள் வேறுவிதம்; பெரியவாச்சான் பிள்ளையிருபத்துநாலாயிரப்படியிலுள்ள அவதாரிகைகள் வேறுவிதம். இதை ஒவ்வொருவரும் அநாயாஸமாக அறியலாம்: தேசிகன் இருபத்துநாலாயிரப்படியையே அடியொற்றி த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவலியையும் த்ரமிடோபநிஷத் ஸாரத்தையும் ஸாதித்திருக்கிறார். பத்தாம்பத்தில் முதல் திருவாய்மொழி *தாளதாமரை யென்பது. இதில் திருமோகூரெம்பெருமானுடைய அநுபவம் நிகழ்கின்றது. இத்திருவாய்மொழிக்கு அவதாரிகையிட்டருளின திருக்குருகைப்பிரான் பிள்ளான் ஆறாயிரப்படியில்—"திருக்கண்ணபுரத்திலெம்பெருமானை யநுபவித்து இப்போது திருமோகூரிலெம்பெருமானை யநுபவிக்கிறார்" என்று இவ்வளவேயருளிச் செய்தார். மேற்பாசுரங்களிலும் ஸாதாரணமாகப் பாசுரப்பொருளே பணித்துள்ளார். மற்ற ஆசார்யர்களெல்லாரும் இங்கு ஒரு விசேஷமருளிச்செய்கிறார்கள்; அதாவது—ஆழ்வார் கீழ் *மாலைநண்ணித்திருவாய்மொழியில் *சரணமாகுமென்கிற பாசுரத்தில் தம்முடைய பரமபதயாத்திரையை நிச்சயித்து அர்ச்சிராதி மார்க்க கதியை யறுதியிட்டு அந்த கதிக்குத் திருமோகூர்க் காளமேகப்பெருமானை வழித்துணையாகப் பற்றுகிறார் இத்திருவாய்மொழியில்—என்பதே. மணவாளமாமுனிகள் நூற்றந்தாதியில் *தாளடைந்தோர் தங்கட்குத் தானேவழித்துணையாம், காளமேகத்தைக் கதியாக்கி* என்றருளிச் செய்தார். ஆசார்யஹ்ருதயத்தில் "மார்க்கபந்து சைத்யம் மோஹனத்தே மடுவிடும்" என்று பணிக்கப்பட்டது. பெரியவாச்சான்பிள்ளை இருபத்துநாலாயிரப்படி முதலானவற்றிலும் 'காளமேகப்பெருமானை வழித்துணையாகப்பற்றுகிறார்' என்றுள்ளது. இவ்விதமாக ப்ரமேயசிகை ஆறாயிரப்படியில் ஸூசனையாகக்கூட கிடையாதென்பது நிர்விவாதம் திருமோகூரப்பனை ஸ்தோத்ரம் பண்ணுகிறாரென்னுமித்தனையே ஆறாயிரப்படியிலுள்ளது. இனி, தேசிகனது த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியிலும் தத்ஸாரத்திலும் பார்க்கவேணும், ரத்நாவளியில் (104) *தைத்யாநாமித்யாதி ச்லோகத்தில் "ச்ராந்திஹாரித்வமுக்க்யை ராகாரைஸ் ஸத்கதிஸ் ஸ்யாத்" என்கிறார். *ஸத்கதிஸ் ஸ்யாத்* என்பதற்கு வியாக்கியான மிட்டவர்கள் "காளமேகப்பெருமானே வழித்துணையென்று" என்றெழுதி வைத்தார்கள். த்ரமிடோபநிஷத் ஸாரத்திலும் இப்பதிகத்தில் தேறின குணமாக "ஸத்பதவ்யாம் ஸஹாயம் ஸ்ரீசம் ப்ராஹ" என்றருளிச்செய்தார். *ஸத் கதிஸ் ஸ்யாத்*

என்ற தாத்பர்ய ரத்நாவளிக்கு *ஸத்பதவ்யாம் ஸஹாயமென்றவிது கைவிளக்காயிருக்கின்றது. இப்படி இன்னும் பலவிடங்கள் உண்டு; தேசிகனுக்கு ஆறாயிரப்படியில் த்வேஷம் என்றோ வெறுப்பு என்றோ சொல்லுகிறோமல்லோம். அது மிகவும் சுருக்கமான வியாக்கியானமாயிருக்கிறபடியால் அதை ஒருகால் ஸேவித்து நிறுத்தி பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம் அதற்கு நான்மடங்கு விரிவாகவும் ரஸகனமாகவும் இருக்கிறதென்கிற காரணத்தினால் தேசிகன் இதுதன்னையே நிதியாகக் கொண்டு இதையே தமக்குக் காலக்ஷேபக்ரந்தமாக ஆதரித்துவந்தார். நவீனர்களுக்கு இவ்வுண்மையுரை விஷமாயிருக்கும். நிகமபரிமலத்தில் பெரியவாச்சான்பிள்ளையைக் கண்டித்துவிட்டாராம்.

## பகவத்கீதையில் அற்புதமான இரண்டு மஹார்த்தங்கள்.

அரிய பெரிய விஷயமிரண்டுகேளீர். நம்பிள்ளை பக்கலில் ஒரு பண்டிதர் வந்து "கீதையில் அர்ச்சாவதார ப்ரஸ்தாவமேயில்லையே! ஏன்?" என்று கேட்க, "நாலாமோத்தில் *யே யதா மாம் ப்ரபத்யந்தே தாந் ததைவ பஜாம்யஹம்* என்றதில் அர்ச்சாவதார நிலையும் அந்தர்க்கதமே காணீர்" என்று நம்பிள்ளையருளிச்செய்ததாக வார்த்தாமாலையிலுள்ளது. திருவாய்மொழியில் (8-1-4) *உமருகந்துகந்தவுருவம் நின்னுருவமாகி* என்கிற பாசுரத்தை அர்ச்சாவதாரபரமாக நிர்வஹித்து இந்த கீதாச்லோகத்தை ஸம்வாதப்ரமாணமாக நம்பிள்ளை காட்டியருளினது ஈட்டிலும் இருபத்துநாலாயிரப்படியிலும் விசதம். இந்த கீதாச்லோகத்திற்கு அர்ச்சாவதாரபரத்வம் கீதாபாஷ்யத்தில் இல்லை. நம்பிள்ளை நிர்வாஹமே. தேசிகன் இந்த நிர்வாஹத்தை தாத்பர்யசந்திரிகையில் *யே யதா மாம் உபக்ரமத்திலேயே "அத்ர க்ருஷ்ணாவதார வ்ருத்தாந்தேந ஸஹ அர்ச்சாவதார வ்ருத்தாந்தோபி ஸங்க்ருஹீத:" என்று காட்டினர். இதைக் காட்டிலும் மிகச்சிறந்த விஷயமொன்று கேளீர்: ஒருநாள் நம்பிள்ளை உபந்யாஸத்தில் *தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்கிற நாச்சியார் திருமொழிப் பாசுரத்தைக்கொண்டு ரஸகனமாக அருளிச்செய்கையில் *ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய:* என்கிற கீதாச்லோகத்தில் சகாரத்தைக்கொண்டு "ஜ்ஞானி என் பக்கலில் செய்யும் ப்ரீதியை உபாதியாக்கி அவன் பக்கலிலே நான் ப்ரீதி பண்ணுவது பெரிதோ?" என்றருளினதாகவுள்ளது. இதை ஸேவித்த தேசிகன் அந்த கீதாச்லோகத்தின் தாத்பர்ய சந்திரிகை முடிவில் "ஸ ச மம ப்ரிய; இத்யத்ர ப்ரதிசயப்ரீதிம் குர்வதோபி மஹோதாரஸ்ய ஈச்வரஸ்யாபி தத்ப்ரீத்யுபாதிகப்ரீதிகரணாத் அத்ருப்திஸ் ஸூசிதேதி தேசிதாசார்யா:" என்றெழுதினர். (தேசிதாஹு:) என்னுமல் தேசிதாசார்யா: என்றதிலுள்ள ப்ரதிபத்தி கௌரவம் உணரத்தக்கது. இங்ஙனே பலபல விஷயங்கள் அடியேனுடைய நூல்களில் திகழும்.

பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த வியாக்கியானங்கள் தேசிகருடைய காலத்தில் நன்றாக ப்ரவசனத்தில் வந்துவிட்டனவென்கிற விஷயம் தேசிகருடைய ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில்—"குலந்தருமென்கிற பாட்டுக்கு வியாக்கியானம் பண்ணின அபியுக்தரும் 'ஜன்மத்தால் வ்ருத்தத்தால் குறைந்தானொருத்தனுக்கு பகவத் ஸம்பந்தமுண்டானால் அவனை இவையுடையானொருத்தன் தாழ நினைக்கக் கூசவேண்டும்படியாயிற்று பகவத்ப்ரபாவமிருக்கும்படி. ஆனால் அவர்களோடு பெண் கொடுத்துக் கொள்ளுகிறதில்லையேயென்னில் அது ஜாதிநிபந்தனம், ச்லாகை குணநிபந்தனம்' என்று நிஷ்கர்ஷித்தார்கள்" என்று பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியான பங்க்திகளையே உதாஹரித்திருப்பதனால் ஸுஷ்பஷ்டமாகிறது. இதனால் பெரியவாச்சான் பிள்ளை தேசிகருக்கு முற்பட்டவர் என்பது நிஸ்ஸந்தேஹஸித்தம். மேலே உதாஹரித்த பங்க்திகளில் அபியுக்தரென்றது பெரியவாச்சான்பிள்ளையையென்று இஞ்சிமேட்டழகிய சிங்கர் வரையிலுமுள்ள வ்யாக்யாதாக்களெல்லோரும் எழுதிவைத்தார்கள். ...

# அஷ்டாதசாஷ்டாதச மஹார்த்தநிதியில் நிகமாந்தகுரு ஸூக்திரஸானுபவப் பதினெட்டு

நம்முடைய ஸம்பிரதாயத்தில் பரச்சத க்ரந்த ரத்னங்களை யருளிச்செய்தவர் ஸ்ரீ நிகமாந்த மஹாகுருவென்பது ப்ரஸித்தம். அவருடைய திவ்யஸூக்திகளில் சில விடங்களில் பாடஸ்கலனமும், சிலவிடங்களில் ருஜுவான பொருள்விளக்கமின்மையும் நேர்ந்திருப்பதாக அடியேன் ஸ்வகீயக்ரந்தங்களில் எழுதியிருப்பதோடு பல ஆப்தர்களிடமும் தெரிவித்திருக்கிறேன், உபந்யாஸ கோஷ்டிகளிலும் விளக்கி வருகிறேன். ருஜுவான பொருள் விளக்க மின்மையென்பது ஸம்ப்ரதாய பேதத்தைச் சார்ந்ததன்று. அதைப்பற்றி இந்த கெட்டத்தில் லவலேசமும் ப்ரஸ்தாவிக்கப்போகிறதில்லை. ரஸிக ஸஹ்ருதயர்கள் அந்த சங்கையை அறவே விட்டிட்டு, லோகாபிராமமான முறையில் நாம் விவரிக்கும் பாடங்களின் ஸாதுத்வத்தையும் பொருள்களின் சுவையையும் ப்ராமாணிக புத்தியோடும் மத்யஸ்த புத்தியோடுங்கண்டு ஆஸ்வாதனம் செய்வார்களாக. (1) பாடம் மாறியதனால் பொருள் சுவை கெட்டது சில விடங்களில். (2) பாடம் மாறாமல் உள்ளபடியிருக்கச் செய்தேயும் பிற்பட்டவர்கள் உண்மைப்பொருளுணராமல் பொருத்தமற்ற பொருளை ப்ரவசனம் செய்துவருவது சில விடங்களில். (3) பொருளில் விபர்யயமின்றியிருக்கச் செய்தேயும் பாடஸ்கலனம் வந்த விடங்களுமுண்டு. ஆக இம்மூன்று துறைகளிலும் விவக்ஷிதங்களை விளக்குகிறேனிப்பதினெட்டில். விவக்ஷிதவிஷயங்கள் பதினெட்டோடு முடிந்து போமவையல்ல. ஆயினும் ப்ரதிஜ்ஞாநுகுணம் பதினெட்டே.

[பொருளில் விபர்யயமில்லாதிருக்கவும் பாடஸ்கலனம் வந்தவிடம் முதலில் காட்டுகிறேன்.]

1. புண்ய நதிகளில் ஒன்றான பிநாகிநீ நதியானது வடநாட்டில் பெருகும்போது **உத்தரபிநாகினி** யென்றும், தென்னாட்டில் பெருகும்போது **தக்ஷிணபிநாகினி** யென்றும் வழங்கப்பட்டு வருகின்றது. வடநாட்டில் நெல்லூர் ப்ராந்தத்தில் பெருகுகின்ற இப்புண்ய நதி **பிநாகினி** யென்றே வழங்கப்படுகிறது. தக்ஷிணபிநாகினியைத் தெரிந்து கொண்டவர்கள்மட்டுமே அதனை உத்தரபிநாகினியென்பார்கள். மற்றையோர்கள் **பிநாகினி** யென்றே வழங்குவர்கள். அந்த நதியே தெற்கே திருக்கோவலூர் ப்ராந்தத்தில் பெருகுகையில் தக்ஷிணபிநாகினி யென்னப்படுகிறது. தமிழ் நூல்களிலும் உலக வழக்கிலும் **பெண்ணை** யென்றே பேசப்படுகிறது. பிநாகினீ யென்கிற உண்மைப் பெயர் பலர்க்குத் தெரியாதென்றும் சொல்லலாம். பாமரர்களுக்குத் தெரியாதேயொழிய ப்ராஜ்ஞர்களுக்குத் தெரியாமலிராது. சில வைதிக கருமங்களில் [பும்ஸவநஸீமந்தோந்நயநாதிகளில்] நதீநாமாநுஸந்தானம் நியமேந செய்ய வேண்டுமிடத்துப் **பிநாகினி** யென்றே ஓதிவருகிறார்களென்பதையுணராதாரில்லை. இதனைப் பெண்ணையென்று வழங்குவது கொச்சைவழக்கு.

கும்பகோணத்தைக் குடமூக்கு என்பது நேரான தமிழ். இரண்டாந்திருவந்தாதியில் பூதத்தாழ்வார் *குடமூக்கில் கோயிலாக் கொண்டு* என்றருளிச்செய்தார். குடந்தையென்பது பெரும்பான்மை. இது ஸம்க்ஷேப வ்யவஹாரமேயாகும். ஸம்ஸ்க்ருத ப்ரயோகத்தில் கும்பகோணமென்றுதான் சொல்லியாகவேண்டும். சுருக்குவதானால் கும்பபுரி யென்னலாம். குடந்தாயாம் என்றோ குடந்தாபுர்யாம் என்றோ சொல்லுவாரில்லை. திருநாங்கூரை நாங்கையென்றும், தேரழுந்தூரை அழுந்தையென்றும், திருவயிந்திரபுரத்தை அயிந்தையென்றும், ஸாரக்ஷேத்திரத்தைச் சேறையென்றும், பெருங்குளத்தைக் குளந்தையென்றும், நாக பட்டணத்தை நாகையென்றும்......... இங்ஙனே பலபல வ்யபதேசங்கள் ஏகதேசக்ரஹணமர்யாதையில் தமிழ்வழக்காக நிகழ்ந்துள்ளன. இவ்விடங்களில் நாங்காயாம் - அழுந்தாயாம் - அயிந்தாயாம் - சேராயாம் - குளந்தாயாம் நாஹாயாம்.........என்று ஸம்ஸ்க்ருதமியற்றுவாரில்லை. இயற்றினால் ஹாஸ்யமேயாகும்.

தமிழ்ப்பெயர்களை ஸம்ஸ்க்ருத நூல்களில் அப்படியே எடுத்தாள்வதென்கிற பத்ததியுண்டு; இது அநவத்யமே. அர்ஜுநனுடைய மாமனார் சித்ரவாஹநனென்பவன்: அவனுடைய பட்டணம் பாண்டிநாட்டில் மணலூரென்பது. மஹாபாரதத்தில் (ஆதி பர்வணி. 63. 81) "ததோ மணலூருபதிகந்யாயாம் சித்ராங்கதாயாம் அர்ஜுந: புத்ரமுத்பாதயாமாஸ பப்ருவாஹநம் நாம." என்றுள்ளது. அனந்த பட்டக்ருதியான பாரத சம்புவிலும் "மணலூருபுரே" என்று சுலோகமியற்றப்பட்டுள்ளது. இவற்றால் தமிழ்ப்பெயர்களை வடநூல்களில் அப்படியே கையாள்வதுண்டென்பது அறியவெளிதாம். இவ்வண்ணமாகப் பெண்ணையென்கிற நதிப்பெயரை வடமொழியில் ஆக்கவேணுமானால் 'பெண்ணை நதீ' என்றோ 'பண்ணாநதீ' என்றோ ஆக்கலாமே தவிர 'பண்ணா' என்று ஆகாராந்தபதமாக ப்ரயோகிக்க ஒரு சாஸ்த்ரமும் இடந்தராது. பல திருப்பதிகள் நதிக்கரைகளில் பாடப்பட்டன. திருத்தேவனார் தொகையையும் திருவெள்ளியங்குடியையும் மண்ணியாற்றின் கரையிலுள்ளதாகப் பாடினார் கலியன். (மலைநாட்டுத்) திருவண்வண்டூரைப் பம்பையின் கரையிலுள்ளதாகப் பாடினார் நம்மாழ்வார். பம்பா என்பதே பம்பையென்றானபடியால் 'பம்பாயாம்' என்று தாராளமாகச் சொல்லலாம். மண்ணியாற்றின் பெயரைச் சொல்லவேணுமானால் (மண்ணி நதீ) என்னலாம். திருப்பேர் நகரை (அப்பக்குடத்தான்) *பொன்னித் தென்பாலென்றார் நம்மாழ்வார். பொன்னியென்பது காவேரி. பட்டர் காவேரியைச் சொல்லவேண்டுமிடங்களில் (ஹேமாபகா) (கநகஸரித்) என்றார். நிகமாந்தகுருவும் அதைத்தழுவுகிறார். (பொன்னி நதீ) என்று ஓரிடத்திலும் சொன்னதில்லை. சொன்னால் அதைத் தவறு என்பாரில்லை. அப்படியே (பெண்ணை நதீ) என்றாலும் தவறாகாது. வடமொழியில் ஏகாரமுள்ளதேயன்றித் தென்மொழியிற்போல் எகரம் (குறில்) இல்லாமையால் (பெண்ணை நதீ) என்று சொல்லமுடியாமைபற்றிப் (பண்ணை நதீ) என்னலாம். இதற்கு நிஜநாமமாக ஏற்பட்டது 'பிநாகிநீ' என்பதே தவிர மற்றொன்றன்று. அதையிட்டே சொல்லியிருக்கவேண்டும். ஆழ்வார் திருவாக்கில் வந்ததென்கிற

கௌரவத்தையிட்டு, தமிழில் வழங்கும் பெயரைச் சொல்லக்கருதினால் (ஸம்ஸ்க்ருத நெறிக்காக) பகரத்தின்மேலுள்ள எகரத்தையகற்றிப் (பண்ணை நதீ) என்றுதான் சொல்லித் தீரவேண்டும். ஈற்றிலுள்ள ஐகாரத்தைத் தவிர்த்துப் (பண்ண நதீ) என்று ஒருவாறு சொல்லலாம். ஸம்ஸ்க்ருதபதமாக வைத்துப்பேசுவதற்கு உபபத்திலவலேசமும் கிடைக்காது. பரிஹாஸ்யமுமாகும். *வித்யோதந்வதி வேங்கடேச்வரகவேள ஜாதமான (பண்ணுதட) ப்ரயோகத்தில் அவத்யம் சொல்லுகிறீயா? என்பீர்கள். சாந்தம்பாபம்! சாந்தம்பாபம்!!. ஸர்வஜ்ஞரான ஸ்வாமி திருவாக்கில் இந்த அவத்யம் புகுந்ததன்று. ஒருகாலும் புகாது. பெண்ணைக்கு ப்ரத்யபிஜ்ஞையுண்டாகும்படியாக (புண்யா) என்றே ஸ்வாமி திருவாக்கு அவதரித்தது. அதையறியாதார் (பண்ணு) என்கிற தவறான பாடத்தைக்கொண்டு புகுத்தினர்.

விவேகிகள் நன்கு ஆராயவேணுமிங்கு. வடமொழியில் ஆகாராந்தமான பதங்கள் தென்மொழியில் ஐகாரவீற்றதாக மாறுமென்று நன்னூலில் கூறப்பட்டது. "ஆவீறு ஐயும்" என்பது நன்னூற் சூத்திரம். இப்படி, தமிழில் ஐகாரவீற்றதானசொல் வடமொழியில் ஆகாராந்தமாகும் என்று ஒரு விதியிருக்க வேண்டாமா? இருக்குமா? இது ஸம்பாவிதமா? கம்பராமாயணத்தில் *நம்பியைக்காணநங்கைக்கு ஆயிரநயனம் வேண்டும்* என்றுள்ளது. சீதையைக்காண இராமனுக்கு ஆயிரங்கண்கள் வேணுமென்றபடி. இதை ச்லோகமாக்கும்படி நியமிக்கப்பட்டவொருமாணுக்கன் "ஸஹஸ்ரம் நியநாநி ஸ்யு: நங்காயா நம்பிமீக்ஷிதும்" என்றானுடனே. அனைவரும் முறுவல் பூத்தனர். இதற்குமேல், நங்கையும் பெண்ணைபுமொன்றாகுமா? நங்கையென்பது வெறுஞ்சொல்: பெண்ணையென்பது ஸம்ஜ்ஞை: இதன் விதி தனிப்பட்டது என்பர்கள். குடந்தை அயிந்தை இத்யாதிகளும் ஸம்ஜ்ஞையேயாதலால் குடந்தாயாம் அயிந்தாயாம் மாலிருஞ் சோலாயாம்......இத்யாதிகளும் அநவத்யமாகலாம். வஸ்துத: பெண்ணைக்கு மூலமான பிநாகிநீயென்பது ஈகாரவீற்றதாக, இருப்பதால் 'பண்ணீதடே' என்றால் பொருத்தமாகும். பெண்ணையென்கிற சொல்லுக்கு நதீவிசேஷம் மட்டும் பொருளன்று; பனைமரமும் பொருள். பெரியதிருமொழியில் *காவார்மடல் பெண்ணையன்றில்* என்றும், பெரிய திருமடலில் *பெண்ணைமேல் பின்னுமவ்வன்றில்* என்றுமுள்ள ப்ரயோகங்கள் பனைமரப்பொருளன. பண்ணையென்னுஞ் சொல்லுக்குப் பல பொருள்களுண்டு. இருந்தாலிருக்கட்டுமே யென்பீர்கள். "பண்ணுவ்ருக்ஷ நிஷண்ண பக்ஷிநித:" என்றும் சுலோகமியற்றலாம். அதற்குத் தாலவ்ருக்ஷமென்று பெயரிருப்பதால் அதைத்தான் இடவேணுமென்னில்: இதற்கும் **பிநாகிநீ** யென்று பெயரிருப்பதால் அதைத்தான் இடவேணுமென்று தெளிய ப்ராப்தம். கிம் பஹுநா? புண்யாதடே என்று ஸ்ரீஸூக்தியருளிய ஸ்வாமிமீது எவ்விதமான அவத்யமும் ஏறாதென்று தெளிக. ...

## 2. திருவாய்மொழியில் *வம்பவிழ்கோதைபொருட்டா* என்ற பாசுரத்திற்கு தாத்பர்யரத்னாவலியில் 'கோதார்த்தோக்ஷாவமர்தே' என்ற விடத்துப் பாட பரிஷ்காரம்.

2. தென்மொழியில் பொதுப்பெயர், சிறப்புப்பெயர் என வழங்கு மவற்றை ஸாமாந்ய நாமதேயம் விசேஷ நாமதேயம் என வடமொழியாளர் வழங்குவர். மாதர், மங்கை, மடந்தை, மின்னேரிடையாள், காவியங்கண்ணி என்றிப்படிப்பட்ட சொற்கள் தென்மொழியில் பொதுப் பெயர்கள். சீதை, நப்பின்னை, தேவகி என்றிப்படிப்பட்ட சொற்கள் சிறப்புப்பெயர்கள். லலனா, வநிதா, ஸுததீ, ஸுப்ரூ: என்றிப்படிப்பட்ட சொற்கள் வடமொழியில் ஸாமாந்ய நாமதேயங்கள். ஸீதா, அஹல்யா, ருக்மிணீ என்றிப்படிப்பட்ட சொற்கள் விசேஷ நாமங்கள். இத்தகைய விசேஷ நாமதேயங்களையிட்டு வரலாறுகள் சொல்ல வேண்டுமிடத்து, தமிழர்கள் மட்டும் ஸாமாந்ய நாமதேயங்களை [அதாவது பொதுப்பெயர்களை] யிட்டும் சொல்லுவதுண்டு. இராமன் சீதையுடன் புறப்பட்டானென்று சொல்ல வேண்டுமிடத்து 'இராமன் மின்னேரிடையாளுடன் புறப்பட்டான்' 'மன்னவன் கருங்குழலியுடன் புறப்பட்டான்' என்றிப்படிச் சொல்லுவதுண்டு. இங்கு 'மின்னேரிடையாள்' 'கருங்குழலி' என்ற சொற்களானவை பொதுவாக ஸ்த்ரீகளுக்கு வாசகங்களேயொழிய, சீதைக்குச் சிறப்புப் பெயர்களல்ல. வைதேகி, மைதிலி, சானகி என்றிப்படிப்பட்ட சொற்களே சீதைக்குச் சிறப்புப்பெயர்களாகும். வட நூலார் இத்தகைய சிறப்புப் பெயர்ச் சொற்களையிட்டே கவியியற்றுவர்கள். கதை சொல்லிக்கொண்டு போமிடங்களில் விசாரமில்லை.

ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களில் சிறப்புப்பெயர்களையிட்டுக்கூறுவது சிறுபான்மையாகவும், பொதுப் பெயர்களையிட்டுக்கூறுவதே பெரும்பான்மையாகவும் காணப்படும். இவ்விஷயத்திற்கு உதாரணங்காட்ட வேணுமேயானால் ஆயிரக்கணக்கான பாசுரங்கள் கிடைக்கும் விஷயம் நெஞ்சில் பதிவதற்காகச் சில உதாரணங்கள் எடுத்துக் காட்டுவோம். "மானேய் நோக்கி மடவாளை மார்வில் கொண்டாய் மாதவா" (திருவாய்மொழி) "மெய்வாய வேல்நெடுங் கண் நேரிழையுமிளங் கோவும் பின்பு போக, எவ்வாறு நடந்தனை யெம்பிராமாலோ!" (பெருமாள் திருமொழி) 'வில்லேர் நுதல்வேல்நெடுங்கண்ணியும் நீயும் கல்லார்கடுங்கானந்திரிந்த' (பெரிய திருமொழி) இப்பாசுரங்களைக் காணலாம். (1) மானேய் நோக்கி மடவாளென்பது ஸ்த்ரீ ஸாமான்யத்துக்குப் பொதுவாசகமே யல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று; ஆயினும் நம்மாழ்வார் ஸ்ரீமஹாலக்ஷ்மியாகிற வ்யக்திவிசேஷத்தை விவக்ஷித்து 'மானேய் நோக்கி மடவாள்' என்றார். (2) 'மெய்வாயவேல் நெடுங்கண்ணேரிழை' என்பதும் ஸ்த்ரீகளுக்குப் பொதுவாசகமே யல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று. ஆயினும் குலசேகராழ்வார் ஸீதாபிராட்டியாகிற வ்யக்தி விசேஷத்தை விவக்ஷித்து, *மெய்வாய வேல்நெடுங்கண்ணேரிழை* யென்றார். (3) *வில்லேர் நுதல் வேல்நெடுங்கண்ணி யென்பதும் ஸ்த்ரீகளுக்குப் பொதுவாசகமே யல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று. ஆயினும் திருமங்கையாழ்வார் ஸீதா பிராட்டியாகிற வ்யக்திவிசேஷத்தையே விவக்ஷித்து *வில்லேர் நுதல்வேல்நெடுங்கண்ணி யென்றார். கண்ணபிரானுடைய சரித்திரங்களில் பூதனையின் முலையுண்டகதையொன்றுண்டு. இதனையருளிச் செய்யுமாழ்வார்கள் பூதனையின் பெயரையிட்டே சொல்வதுமுண்டு. அது சில விடங்களில். பலவிடங்களில் பொதுப்பெயரே காணப்படும். பெரிய திருமொழியில் *கண்சோர வெங்குருதி வந்திழிய வெந்தழல்போல் கூந்தலாளை, மண்சேர முலையுண்டமாமதலாய்* (7-4-1) என்கிறார் திருமங்கையாழ்வார். இங்கு 'வெந்தழல்போல் கூந்தலாள்' என்றது பூதனையை நோக்கி

யேயில்; 'முலையுண்ட' என்று அடுத்து வரும் சொல்தொடரினால் இப்பொருள் தெரிந்துகொள்ளக் கூடுமேயல்லது இயற்கையாக இச்சொல் பூதனையை யுணர்த்தமாட்டாது. திருவல்லிக்கேணிப் பதிகத்திலுள்ள *அந்தகன் சிறுவன் என்கிற ஆறும்பாட்டில் முதலடியிலும் மூன்றாமடியிலும் த்ரௌபதியைப்பற்றிக் கூறுகின்றாராழ்வார். முதலடியில் 'அணியிழை' என்கிற சொல்லே யுள்ளது. மூன்றாமடியில் 'சந்தமல் குழலாள்' என்ற சொல்லேயுள்ளது. இவை ஸ்த்ரீகளுக்குப் பொதுப்பெயர்களே யல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்குச் சிறப்புப்பெயரன்று. ஆயினும் ஆழ்வார் இப்பொதுப் பெயர்களையிட்டே இங்கு த்ரௌபதியைக் குறிப்பிடுகிறார். கண்ணபிரான் ஸத்யபாமைப் பிராட்டிக்காகப் பாரிஜாதாபஹரணம் செய்தருளினவாற்றைத் திருமங்கையாழ்வாருளிச் செய்யுமிடங்களில் பாரீர்; "மட்டவிழுங் குழலிக்கா வானோர் காவின் மரங்கொணர்ந்தான்" என்றும் "மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்துவரை நட்டான்" என்றுமருளிச்செய்கிறார். இவ்விடங்களில் 'மட்டவிழுங்குழலி' என்பதும் மாதரென்பதும் பொதுப்பெயர்களேயன்றிச் சிறப்புப் பெயர்களல்ல. இராம்பிரான் குஹப்பெருமாளோடு சேர்ணிந்த தோழமை கொண்டபோது பிராட்டியைக்காட்டி இவள் உன்தோழியென்று கூறியதைக் கூறுகின்ற திருமங்கையாழ்வார் "மானமரு மென்னோக்கியுன் தோழி" என்கிறார். இங்கு 'மானமருமென்னோக்கி' யென்றது பொதுப்பெயரேயன்றி ஸீதைக்குச் சிறப்புப்பெயரன்று. திருவாய்மொழியில் *ஆயர்கொழுந்தாய் அவரால் புடையுண்ணும் மாயப்பிரானை* என்ற பாசுரத்தில் கண்ணபிரான் விஷயத்தில் பிரயோகிக்கப்பட்ட 'ஆயர் கொழுந்து' என்னுஞ்சொல்லை அவ்வாழ்வார் தாமே *கூந்தல் மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்கும் கேள்வன்றன்னை* என்ற பாசுரத்தில் நப்பின்னைப் பிராட்டிக்கு வாசகமாகப் பிரயோகித்தருளினார். இங்ஙனமெடுத்துக்காட்டப்புகின் விரிவு பெரிதுடைத்தாம். இப்படிப்பட்ட பிரயோகம் அருளிச்செயல்களில் மட்டுமேயல்ல: கம்பராமாயணம், அஷ்டப்பிரபந்தம் முதலிய தமிழ் நூற்களெல்லாவற்றிலும் யதேஷ்டமாகக் கிடைக்கும். இந்த ஸரணியானது தமிழ் நூல்களுக்கே அஸாதாரணமென்னலாம். "அர்த்தாத் ப்ரகரணால்லிங்காத் ஔசித்யாத் அர்த்தநிர்ணய:" என்று வடநூலவர் காட்டிய வழியைக்கொண்டே பொருள் காண்கிறோம்.

இனி ப்ராக்ருத விஷயத்தைக் கொள்வோம். கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வளர்ந்தருளுங்காலத்து ஏழெருதுகளை வலியடக்கி கும்பர் மகளான நப்பின்னையை மணம் புணர்ந்ததாக ஒரு சரித்ரமுண்டு. இதை ஆழ்வார்கள் அடிக்கடி பேசியநுபவிப்பர்கள். அந்த நப்பின்னையையே பின்னையென்றும் வழங்குவர். [பின்னைமணாளனை, பின்னைதோள் மணந்த பேராயா!] அவளுக்கு வடமொழித் திருநாமம் நீளா என்பதாம். அது கூரத்தாழ்வானாலும் பட்டராலும் வெளியிடப்பட்டுள்ளது. ஸுந்தர பாஹுஸ்தவத்தில் "நீளா குசேந ஸத்ருசீ" என்றது கூரத்தாழ்வான் திருவாக்கு; "நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தம்" இத்யாதியான திருப்பாவைத் தனியன் பட்டர் திருவாக்கு. அப்பய்தீக்ஷிதரால் குவலயாநந்தத்தில் உதாஹரிக்கப்பட்டுள்ள "பத்மே த்வந்நயநே ஸ்மராமி" என்றவொருச்லோகத்திலும் நீளா என்கிற இத்திருநாமம் காட்டப்பட்டுள்ளது. ஆகவே, எருதேழடர்த்து மணந்துகொள்ளப்பட்ட மனைவிக்கு நப்பின்னையென்பது தென்மொழித் திருநாமமென்றும், நீளா என்பது வடமொழித் திருநாமமென்றும் தேறி நின்றது: ஆழ்வார்கள் எருதேழடர்த்த கதையைக்கூறுமிடங்களில் பெரும்பாலும் நப்பின்னையை வெளிப்படையாகக் கூறாது பொதுப் பெயர்களாலேயே கூறியுள்ளார்கள். "காம்பணைதோள் பின்னைக்கா ஏறுடனேழ் செற்றதுவும்" 'பின்னைபொருட்டு ஆன்வென்றானூர்' என்றிங்ஙனேயுள்ள பாசுரங்கள் மிகச்சிலவே. "மின்னினன்ன நுண்மருங்குல் வேயேய் தடந்தோள் மெல்லியற்கா, மன்னுசினத்த மழவிடைகள் ஏழன்றடர்த்த மாலதிடம்" "கொடி,

பேரிடையாள் பொருட்டாக, வன்தாள் விடையேழன்றடர்த்த'' ''பந்தணைந்த மெல்விரலாள் பாவை தன் காரணத்தால் வெந்திறலேறேழும் வென்ற வேந்தன்'' என்றிங்ஙனேயுள்ள பாசுரங்கள் மிகப்பல. மேலே யெடுத்துக் காட்டியுள்ள பாசுரங்களில் நப்பின்னையினுடைய சிறப்புப்பெயர் இல்லை, பொதுப்பெயரேயுள்ளது. இருந்தாலும் எருதேழடர்த்தவாற்றைச் சொல்லியிருக்கையாகிற ஸமபிவ்யாஹார பலத்தினால் நப்பின்னையென்கிற சிறப்புப் பொருள் கிடைத்தே தீருகின்றது. திருமங்கையாழ்வார் திருவெழு கூற்றிருக்கையில் ''அறுபத முரலுங் கூந்தல் காரணம், ஏழ்விடையடங்கச் செற்றனை'' என்றருளியுள்ளார். இங்கு 'ஏழ்விடையடங்கச்செற்றனை' என்பதற்கு—ஏழெருதுகளைக் கொன்றாயென்று பொருள். அதற்கு முன்னேயுள்ள 'அறுபதமுரலுங் கூந்தல் காரணம்' என்பதற்கு என்ன பொருளென்று விமர்சிக்கவேணும். அறுபதமென்று வண்டுக்குப் பெயர். வண்டுகள் ரீங்காரம் செய்யப்பெற்ற கூந்தல் என்றதாயிற்று. இச்சொல்தொடர் அன்மொழித்தொகை [பஹுவ்ரீஹி ஸமாஸம்] பெற்றது ஆதலால் வண்டுகள் முரலப்பெற்ற கூந்தலையுடையவள் என்று பொருள் பட்டுநிற்கும். எனவே, இது மாதர்க்குப் பொதுப் பெயராக நின்றது. பிரகரணம் நோக்கி 'நப்பின்னைப் பிராட்டிக்காக' என்று பொருள் கொள்ளக்குறையில்லை. இதை வடசொல்லால் மொழிபெயர்க்க வேணுமானால் வசநவ்யக்தி எப்படியிருக்க வேணுமென்பதை வித்வான்கள் அறிவார்கள். நீளா நிமித்தம் என்றோ, ஷட்பதஜுஷ்டகுந்தலா நிமித்தம் என்றோ மொழிபெயர்க்க வேணுமேயல்லது வேறுவிதமாக மொழிபெயர்க்கலாகாதென்பது கல்வெட்டு. இப்படி திருமங்கையாழ்வாருடைய திருவாக்கில் 'அறுபதமுரலுங் கூந்தல் காரணம்' என்று அவதரித்திருப்பது போல நம்மாழ்வாருடைய திருவாக்கிலும் ''வம்பவிழ் கோதை பொருட்டா மால்விடையேழுமடர்த்த'' என்கிற பாசுரம் அவதரித்துள்ளது. சொல் வடிவத்தில் வாசியுள்ளதேயன்றி கருத்தில் சிறிதும் வாசியில்லை. நப்பின்னைக்காக எருதேழடர்த்த வாற்றையே இவ்வாழ்வாரும்மருளிச் செய்கிறார். நப்பின்னையை 'அறுபதமுரலும் கூந்தல்' என்ற சொல்தொடரால் திருமங்கையாழ்வார் குறித்தனர். அப்பிராட்டியையே நம்மாழ்வார் 'வம்பவிழ் கோதை' என்ற சொல் தொடரால் குறிக்கின்றனர். அங்கு எப்படி அன்மொழித் தொகையோ இங்கும் அப்படியே அன்மொழித்தொகை தான் [பஹுவ்ரீஹி ஸமாஸமே] இதை ஒருபோதும் மறக்கலாகாது. நறுமணம் பறப்படுகின்ற பூமாலையை யுடையவள் என்பது சப்தார்த்தம். கோதையென்கிற தமிழ்ச் சொல்லுக்குப் பூமாலையென்பதும், கூந்தலென்பதும் பொருள். பூமாலை யென்கிற பொருளிலேயே பெரும்பான்மையான பிரயோகம் காண்கிறது. ''வம்பவிழ் கோதைபொருட்டா'' என்பதற்கு பரிமள ப்ரசுரமான பூமாலையை யணிந்துள்ளவளுக்காக மால்விடையேழுமடர்த்தவனென்றதாயிற்று. அவள் யாவளென்னில் நப்பின்னைப் பிராட்டியென்பது அர்த்தாத்ஸித்தம். திருவாய்ப்பாடியில் விடையேழடர்த்தது நப்பின்னைக்காகவேயன்றோ. இனி, வம்பவிழ்கோதை பொருட்டா என்கிறவிதனை வட மொழியில் மொழிபெயர்க்க வேணுமானால் எங்ஙனேயாக வேணுமென்பதை விவேகிகள் விமர்சிப்பது, கருத்துவகையில் நீளார்த்தம் என்றும், சொல் வடிவத்தின்மேல் 'ஸுரபிமால்யாலங்க்ருதலலநார்த்தம்' என்றும் மொழிபெயர்க்கலாமே யல்லது வேறுவிதமாக மொழிபெயர்க்கத் தகுதியில்லை. தேசிகர் கோதார்த்தமென்று மொழிபெயர்த்திருப்பதாக த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியில் பாடம் காண்கிறது. மூலத்தில் 'கோதை பொருட்டா' என்றிருப்பதால் அதற்கு நேராக இங்ஙனே மொழிபெயர்த்ததில் என்னபிசகு? என்று சிலர் கேட்கக்கூடும். அவர்கள் என்ன ஆலோசிக்க வேண்டுமென்றால், மூலத்தில் 'நங்கை பொருட்டா' 'மங்கை பொருட்டா' என்றிருந்தால் அதை நங்கார்த்தம், மங்கார்த்தம் என்று மொழிபெயர்த்து விடலாமாவென்று ஆலோசிக்கவேண்டும். இங்கு மூலத்திலுள்ள

கோதையென்கிற தமிழ்ச்சொல்லுக்கு என்ன அர்த்தம்? கோதா என்கிற வட சொல்லுக்கு என்ன அர்த்தம்? என்று நன்கு விமர்சித்தால் கோதை பொருட்டா வென்கிற மூலத்திற்கும் கோதார்த்தமென்கிற மொழிபெயர்ப்புக்கும் ஸமந்வயலேசமுமில்லையென்று எளிதிலுணர்வர்.

கோதா என்கிற வடசொல்லுக்கு மூலமான கோதையென்கிற தமிழ்ச்சொல் ஒன்று உண்டு; திருப்பாவையின் முப்பதாவது பாட்டிலும் நாச்சியார் திருமொழியின் ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப் பாசுரங்களிலும் ஆண்டாளுக்குத் திருநாமமாகக்கோதையென்கிற சொல் காணப்படுவதுண்டே, அதற்கும் கோதா என்கிற வட சொல்லுக்கும் நல்ல பொருந்தமுண்டு; அதை அபலபிக்கவில்லோம். அந்த மருமத்தைத் தனியே சில நூல்களில் விவரித்திருக்கிறேன்; கண்டுகொள்க. மஹா ஜ்ஞாதாவான தேசிகர் •கோதை பொருட்டாவென்கிற இவ்விடத்திற்கு கோதார்த்த என்று ச்லோகமிட்டதுபற்றி ஆராயவேணும். இந்த த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளிக்கு அடியேன் தமிழுரை யெழுதிப் பலவாண்டுகட்கு முன்பே அச்சிட்டு வெளியிட்டிருக்கிறேன்; எடுத்துப்பார்க்க. தேசிகருடைய ஞானத்திற்குக் குறை கூற வொண்ணாது; இங்குப் பாடப்பிறழ்வு நேர்ந்திருப்பதாகக்கொள்வது தவிர வேறுபுகலில்லை. திருநாட்டிலிருந்து சிலவித்வான்கள் திரும்பி வந்தாலும் கோதார்த்த மென்பதை ஸமர்த்திக்க ஒருபடியாலும் முடியாதென்பது திண்ணம். •சேவடி மேலணி செம்பொற்றுழாயென்றே கூவுமால் கோள்வினையாட்டியேன் கோதையே• என்றும், கோலந்திகழ் கோதையென் கூந்தலுக்கே• என்றுமுள்ள திருவாய்மொழிப் பாசுரங்களைக்கொண்டு, தமிழறிவற்ற சிலர், நம்மாழ்வார்க்கும் கோதை யென்கிற திருநாமமுண்டு காணும் என்று சொல்வதுண்டு: அது போல நப்பின்னைக்கும் கோதை யென்றும், கோதா என்றும் திருநாம முண்டென்று சில பாமரர்களின் செவியிலே ஏகாந்தமாகப் பேசிக்கொண்டு போது போக்கலாமத்தனை யன்றிவேறொன்றும் செய்யலாகாது. யாதவாப்யுதயத்தில் நீலா என்றே ஸ்வாமியாதித்தது. ... ... (2)

3. யாதவாப்யுதயத்திலுட் புகுந்து சில சுவைப் பொருள்கள் கூறுவன கேளீர்.

யாதவாப்யுதய மஹாகாவ்யத்தின் முதல்ஸர்க்கத்தின் முடிவு சுலோகம்:—

''ஆர்வாஸ்ய வாகம்ருதவ்ருஷ்டிபிராதிதேயாந்
தைதேயபாரநமிதாம் தரணீஞ்ச தேவீம்,
ஆவிர்ப்புபூஷுரநகோ வஸுதேவபத்ந்யாம்
பத்மாபதி: ப்ரணிததே ஸமயம் தயாயா:''

என்பதாம். தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி எம்பெருமான் தேவகிப்பிராட்டியாரிடம் திருவவதாரம் செய்து தனது திருவருளைப் பிரகாசிப்பிக்கத் திருவுள்ளம் பற்றினபடியைச் சொல்லுவது இந்த சுலோகம். இதில் உத்தரார்த்தத்தில் (ஆவிர்புபூஷு:) என்றவுடனே (அநக:) என்றொரு விசேஷணமுள்ளது. தோஷமற்றவன் என்பது இதன் பொருள். அகில ஹேயப்ரத்யநீகனென்றபடி. எம்பெருமானுக்கு தோஷமில்லாமையை அந்தந்த ப்ரகரணங்களுக்குத்தக்கபடி உபபாதிக்க வேண்டும். ப்ரக்ருதத்தில், ஆவிர்புபூஷு:—அவதரிக்கத் திருவுள்ளம் பற்றினன் என்று சொல்லி, உடனே அநக:—அவத்யமில்லாதவன் என்றமையால், அஸ்மதாதிகளின் பிறப்புக்கு நல்வினை தீவினைகளாகிற கருமங்காரணமாகிறாப் போலே பகவானுடைய அவதாரத்திற்கும் கருமம் காரணமாகிறதோவென்று சங்கிக்க நேருமன்றோ. அவ்விதமான பிறப்பாகில் அது அவத்யமேயாகுமன்றோ. பகவான் கருமம் காரணமாக வன்றிக்கே கேவலம் கருணையே காரணமாக அவதரிக்கின்றானாகையாலே அத்தகைய அவத்ய

த்திற்கு அவகாசமில்லையென்பது இங்கு விவக்ஷிதம். அலங்கார சாஸ்த்ரத்தில் பரிகர மென்று ஓர் அலங்காரம் சொல்லிற்று. *அலங்கார: பரிகர: ஸாபிப்ராயே விசேஷணே* என்று அதன் லக்ஷணமும் சொல்லிற்று. ஒருகருத்தோடு விசேஷணமிட்டால் அங்கு பரிகராலங்கார மென்றபடி. இவ்வலங்காரமே ஆசிரியரால் இங்கு உத்தேசிக்கப்பட்டது அதை ஆசிரியர் தாமே நான்காவது பாதத்தினால் [*பத்மாபதி: ப்ரணிததே ஸமயம் தயாயா: *என்பதனால்] விளக்கியருளினார். ஆக அநக: என்பதற்கு—கர்மவச்யனாகிப் பிறவாதவனாகையாலே கர்மவச்யத்வமாகிற தோஷமில்லாதவன் என்பதேஇங்கு ஆசிரியர் திருவுள்ளம் பற்றின பொருளாகும்.

வியாக்கியான கர்த்தாவான அப்பயதீக்ஷிதர் இங்கு"அநக:—நிரவத்ய:; தத்தத் கர்மாநு ரோதிதயா வைஷம்யநைர்க்ருண்ய தோஷரஹித:—" என்றெழுதியுள்ளார். அவரவர்கள் செய்யும் புண்யபாபரூப கருமங்களையொட்டிப் பலன் கொடுப்பவனாகையாலே வைஷம்யநைர்க்ருண்ய மாகிற தோஷமில்லாதவன் — என்பது இந்த வாக்யத்தின் பொருள். பகவான் உலகங்களைப் படைக்குங்காலத்திலே இப்படிப்பட்ட தோஷசங்கையும் தத்பரிஹாரமும் சாரீரகமீமாம் ஸையில் ''வைஷம்யநைர்க்ருண்யே நஸாபேக்ஷத்வாத்'' என்கிற ஸூத்ரத்திலே நியுள்ளது. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத்தில்—*நிம்நோந்நதஞ்ச கருணஞ்ச ஜகத் விசித்ரம் கர்ம வ்யபேக்ஷ்ய ஸ்ருஜதஸ் தவ ரங்கசேஷிந்!, வைஷம்யநிர்க்ருணதயோர் ந கலு ப்ரஸக்தி: தத் ப்ரஹ்ம ஸூத்ரஸசிவா: ச்ருதயோ க்ருணந்தி.* என்கிறச்லோகத்தினால் இதனை விசதீகரித்தருளினார். அங்கு அதற்குமுன் சுலோகத்தில் (*அசிதவிசேஷிதாந் ப்ரலயஸீமநி ஸம்ஸரத:* இத்யாதியில்) ஸ்ருஷ்டிப்ரஸ்தாவ முள்ளபடியினால் அடுத்த சுலோகம் அங்ஙனே அமைய வேண்டியதாயிற்று. இங்கு ஸ்ருஷ்டிப்ரஸ்தாவமில்லை, அவதாரப்ரஸ்தாவமேயுள்ளது. இதற்குச் சேர 'கர்மவச்யத்வமாகிற தோஷமற்றவன்' என்னும் பொருளே பொருந்தும். மற்றுமிப்புடையிலே வேறுவகையான பொருளும் பகரலாமேயல்லது வைஷம்யநைர்க்ருண்ய தோஷமற்றவன் என்னும் பொருள் ஸர்வாத்மநா இங்கு அப்ரஸக்தம். ... ... ... (3)

4\. யாதவாப்யுதயத்திலேயே நான்காவது ஸர்க்கத்தில் ஆறுவது சுலோகம்.

*நந்தச் ச தீவ்ரேண பயேந ஸத்யஸ் ஸமேத்ய பச்யந் அநகம் குமாரம்,*
*தேநைவ தஸ்ய த்ரிஜகந்நியந்து: ப்ராயுங்க்த ரக்ஷாம் பரமார்த்தவேதி *

என்பது. பூதனைவந்து முலை கொடுத்து மாண்டவுடனே நந்தகோபர் காப்பிட்டபடியைச் சொல்லுமிந்த சுலோகத்தில் நந்தகோபர்க்குப் பரமார்த்தவேதியென்கிற விசேஷணம் இடப்பட்டுள்ளது. இங்கு தீக்ஷிதர் வியாக்கியானம் செய்திருப்பதாவது ''பகவாநேவ ஸர்வஸ்ய ரக்ஷக இதி பரமம் அர்த்தம் அவகச்சந் நந்த:'' என்பதாக. 'எம்பெருமானே ஸர்வரக்ஷகனென்கிற உண்மையையுணர்ந்தவரான நந்தகோபர்' என்பது இதன் பொருள். இது ப்ரக்ருதத்திற்குச் சேர்ந்ததன்றாகையாலே விரஸமான பொருளென்ன வேண்டும். இங்குச் சுவைமிக்க பொருள் கேளீர். [பரமார்த்த வேதீ] எம்பெருமான்தானே ஸர்வரக்ஷகனாயிருக்கச் செய்தேயும் தனக்குப் பிறர் செய்யும் ரக்ஷையினால்தான் ரக்ஷணமுண்டாகுமென்று நினைப்பவனென்கிற பரமார்த்தத்தை யுணர்ந்தவர் நந்தகோபர் என்றபடி. அவனுக்குப் பிறர் செய்யும் ரக்ஷையாவது காப்பிடுதல், பல்லாண்டு பாடுதல், போற்றியென்னுதல் முதலியனவாம்; விபவாவதாரங்களிலும் அர்ச்சாவதாரங்களிலும் அன்பர்கள் பல்லாண்டு பாடுவதனாலேயே [அதாவது மங்களாசாஸனம் செய்வதனாலேயே] தனக்கு ரக்ஷணமுண்டாவதாக நினைப்பவனென்பதில் எம்பெருமானார் தர்சனத்தவர்களுக்கு விவாதமோ ஸந்தேஹமோ இராது. விபவத்தில் *தத் தே பவது மங்களம்*

*யாம் ஓஷதிமிவாயுஷ்மந்! *இத்யாதி மங்களா சாஸனத்திலேயே பகவானுக்கு அநிஷ்டநிவ்ருத்தியுண்டானதாக ஆசாரியர்கள் நிர்வஹிக்கக் காண்கிறோம். அர்ச்சையில் * திருப்பல்லாண்டு பாடுவது அவன்றன் திருவுள்ளத்தைபடியொற்றியேயன்றோ அமைந்தது. திருவாய்ப்பாடியில் வீதிகளிலே ஸ்வைரவிஹாரம் பண்ணித்திரிகிற கண்ணபிரானை நோக்கி யசோதை கூறுகின்றாள்— *காப்பாருமில்லை கடல்வண்ணாவுன்னைத் தனியேபோய் எங்குந்திரிதி * என்று. * காக்குமியல்வினன் கண்ணபெருமானென்று யசோதை அறிந்திருக்கக்கூடும். ஆயினும் கடல் வண்ணா! என்னும்படியான வடிவழகைக் கண்டவாறே அவனுடைய ரக்ஷகத்வத்தை மறந்து ரக்ஷ்யனே இவனென்று ப்ரதிபத்திபண்ணியன்றோ 'காப்பாருமில்லை கடல் வண்ணாவுன்னை' என்றாள். ஆக, இவனே ஸர்வ ரக்ஷகனென்று உணர்வது பரமார்த்தவுணர்வன்று; நந்தகோபர் அப்படியுணர்ந்திருந்தாராகில் இவனுக்குத்தாம் ரக்ஷையிட்டிருக்கவேமாட்டார், நாம் ரக்ஷையிட்டாலன்றி இவன் அபாயமற்றிருக்க மாட்டானென்று உள்ளபடி உணர்ந்ததனாலேயே ரக்ஷையிட்டார். தீக்ஷிதர் இச்சுவைப் பொருளையுணருங் குடியிலே பிறந்திலராதலால் இப்பரமார்த்தம் அவர்க்கு ஸ்புரியாதது வியப்பன்றுகிடீர்... ... ... ... ... (4)

5. யாதவாப்யுதயத்திலேயே நான்காவது ஸர்க்கத்திலேயே பதினொருவது சுலோகம்;

*விச்வாநி விச்வாதிகசக்திரேகோ நாமாநி ரூபாணி ச நிர்மிமாண:,
நாமைகதேசக்ரஹணேபி மாதுர் பபூவ க்ருஷ்ணோ பஹுமாநபாத்ரம் *

என்பது. சிறுபிள்ளைகள் வார்த்தை சொல்லத் தொடங்கும்போது அவரவர்களின் பெயர்களைப் பூர்த்தியாகச் சொல்லமாட்டாமல் அரைகுறையாகச் சொல்வது இயல்பு. ஸ்ரீக்ருஷ்ணசிசோரனும் உற்றுற்றவினர் தோழன்மார் முதலானோருடைய நாமங்களைக் கொச்சையாகச் சொல்லச் செய்தேயும் தாய்க்கு உள்ளம் பூரித்து விட்டது—என்கிறது இதில். இங்கு இவ்வர்த்தம் அனைவர்க்கும் எளிதாகத் தெரியக் கூடியதேயாம். தீக்ஷிதர் இங்கு வியாக்கியானிப்பதாவது— "மாது: யசோதாயா: நாமைகதேசக்ரஹணேபி அஹோ மாதுர் நாம க்ருஷ்ணேதி வாத்ஸல்யவதாம் பந்தூநாம் ச்லாகாவிஷய: அபூத் இத்யர்த்த:" என்று; இவ்விடத்திற்கு இதுவா பொருள்;; 'மாதுர் பபூவ க்ருஷ்ணோ பஹுமாநபாத்ரம்' என்றுள்ள மூலத்தை அந்தோ! ஒடித்திட்டாரே. உலகத்தில் சிறுபிள்ளைகள் செய்யும் நாமைகதேச க்ரஹணம் தாய் விஷயத்தில் மட்டுமன்றே. கண்ணபிரானும் தாய் விஷயத்தில் மட்டும் அதுசெய்ததாக ச்லோகத்தில் சொல்லியிருக்கவில்லை. "மாது: பஹுமாந பாத்ரம் பபூவ" என்று நேரே அன்வயித்து வியாக்கியானிக்க ப்ராப்தமாயிருக்க அதைவிட்டு "மாது: நாமைகதேச க்ரஹணேபி" என்று அஸ்தானே அன்வயங்காட்டி, ச்லோகத்திலில்லாத 'பந்தூநாம்' என்னுமொருபதத்தை அநாவச்யகமாகத் தொன்றுங் கூட்டி "வாத்ஸல்யவதாம் பந்தூநாம் ச்லாகாவிஷயோபூத்" என்று முடித்திருப்பது விரஸமென்பதை விவேகிகள் உணர்வார்கள். ... ... ... (5)

6. யாதவாப்யுதயத்திலேயே அவ்விடத்திலேயே முப்பத்து நான்காவது சுலோகம்:—

ஆநீதமக்ரே நிஜபந்தநார்த்தம் தாமாகிலம்ஸம்ஹிதமப்யபூர்ணம்,
விலோக்ய நிர்விண்ணதியோ ஜநந்யாஸ் ஸங்கோசசக்த்யா ஸ பபூவ பத்ய:-

கண்ணபிரான் வெண்ணெய் களவுகாண்பது முதலான தீம்புகள் செய்வது கண்ட யசோதைப் பிராட்டி அவனை உரலிலே கட்டிவைக்கக் கருதியதை முந்தின ச்லோகத்திலே சொல்லி, இந்த சுலோகத்தில் அவன்கட்டுண்டபடியை வெகுசமத்காரமாகச் சொல்லுகிறார். தீக்ஷிதருடைய

வியாக்கியானத்திற்கு நிலமல்லாத சுவைகளை இங்கு விவரிக்கிறேன். [அகிலம் தாம ஸம்ஹிதமபி அபூர்ணம் விலோக்ய] கண்ணபிரான் வெண்ணெய் களவுகண்டானென்று யாவருங் கேட்டிருக்கிறீர்கள். ஆசிரியரும் இங்கு முந்தின சுலோகத்தில் *முஹு: ப்ரவ்ருத்தஷ் நவநீத சௌர்யே* என்று ஸாதித்துள்ளார். கண்ணனுக்கு வெண்ணெய் வேணுமானால் அதைத் திருடியுண்ணவேணுமோ? யாரைக் கேட்டாலும் கொள்ளை கொள்ளையாக அள்ளிக் கொடுக்கக் காத்திருக்கிறார்கள். கிடைக்காதவிடத்திலன்றோ களவு செய்யவேண்டும். எளிதாகக் கிடைக்குமிடத்தில் எதற்காகக் களவு செய்தானென்று விமர்சிக்கவேணும் உண்மை கேண்மின்; வெண்ணெயிலாசையென்பது வியாஜம்; கட்டுண்டிருந்து தன்னுடைய அத்யந்தஸௌலப்ய குணத்தைக்காட்டியுகக்க வேணுமென்பது முக்கியமான ஆசை. திருநாட்டில் காட்டமுடியாத இத்தகைய திருக்குணங்களைக் காட்டுகைக்கேயன்றோ முக்கியமாக இங்குத் திருவவதரித்தது. ஆக கட்டுண்டுகிடக்கையாகிற பெருங் குணத்தைக் காட்டவேண்டியே களவு செய்தான். பிறரிடம் கேட்டு வாங்கியுண்டானாகில் கட்டியடிக்க ப்ரஸக்தியில்லையன்றோ. கண்ணனுடைய சிறுச்சேவகங்கள் பலவிதம். சில சமயங்களில் களவு செய்துவிட்டுத் தாய்க்குப் பிடிகொடாமலே *தாயெடுத்த சிறுகோலுக்கு உளைந்தோடி* என்கிறபடியே ஓடிப்போவதுமுண்டு; தாய் கையில் பிடிபட்டும் அவளால் கட்டமுடியாதபடி செய்து கொள்வதுமுண்டு. அதற்காகக் கண்ணன் வீட்டிலுள்ள கயிறுகளைத் துண்டு துண்டாக அறுத்து வைத்திட்டுக் களவு செய்யப்புகுவான். அப்போது யசோதையின் கைக்கு வேணுமென்றே அகப்படுவான். அவள் இவனை ஒரு கையால் பிடித்துக்கொண்டு மற்றொருகையால் கயிறுகளையெடுக்கப் போவள்; அது ஏற்கெனவே இவனால் துண்டு துண்டாக்கப்பட்டிருந்தபடியாலே அது கொண்டு எளிதாகக் கட்டமுடியாமல் அவற்றை ஒன்றோடொன்று முடிபோட்டுக் கட்டப் பார்ப்பள். ஐந்தாறு சுற்றுக்குப்போரும்படி வெகு நீளமாக்கிப் பிறகு கட்டப்புகுவள். அப்போது இவன் *பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்து பெற்றியோய்*(திருச்சந்தவிருத்தம்) என்கிறபடியே ஒருக்ஷணத்தில் தன்னுடலைப் பெருக்கிக்கொண்டு அந்தப் பெரிய கயிறு ஒரு சுற்றுக்கும் போராதபடி செய்துவிடுவன். அது கண்ட யசோதை வெகுநாழிகை தான்பட்ட பரிச்ரமம் பாழாயிற்றேயென்று வருந்தி இவனை விட்டுத் தொலைப்போமென்று நினைப்பள். கண்ணன் அந்த நினைவையறிந்தவாறே 'நாம் கட்டுண்டு கிடந்து காட்டவேணுமென்று நினைத்த பெருங்குணத்தை இழந்து விடலாமோ!' என்றெண்ணி உடனே *சுருக்குவாரையின்றியே சுருங்கினாய்* என்கிறபடியே முன்பு ஒரு சுற்றுக்குப் போராதிருந்த கயிறு பத்தெட்டு சுற்றுக்குப் போரும்படியாகத் தன்னை அணோரணீயானாக ஆக்கிக் கொண்டானாம். இதை [ஸங்கோச சக்த்யா ஸ பபூவ பத்ய:] என்பதனால் ஆசிரியர் காட்டியருளினர். ஆழ்வார்கள் பலரும் *கட்டுண்டிருந்தானென்றும்*உரலோடாப்புண்டிருந்தானென்றுமே அருளிச்செய்தார்கள். மதுரகவிகள் ஒருவரே * கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்* என்று, தன்னைத்தானே கட்டுண்ணலாம்படி செய்து கொண்டானென்றார். அதையடியொற்றியாயிற்று ஆசிரியர் இங்ஙனே ச்லோகமிட்டபடி. 'தம் பபந்த' என்னாதே 'ஸ பபூவ பத்ய:' என்ற சொல்லழகு காண்க.

"தாமாகிலம் ஸம்ஹிதமபி" என்ற இவ்விடத்தில் வடமொழி வேதத்தின் மருமமொன்று கேண்மின். வேதத்தில் ஸம்ஹிதை பதம் க்ரமம் என்று மூன்றுண்டு; நெடுக தண்டாகாரமாக ஓதிப்போருவது ஸம்ஹிதை. அதைத் துண்டு துண்டாக்கிப்போதுவது பதம். அந்த பதங்களை ஒன்றோடொன்று பிணைத்து ஓதுவது க்ரமம். க்ரமம் நெடுகச்சென்றால் அது ஸம்ஹிதையாய்விடும். யசோதை நீளமாக வைத்திருந்த கயிறு ஸம்ஹிதாவஸ்தை. கண்ணன் அதைத்

துண்டுதுண்டாக்கினது பதாவஸ்தை. யசோதை அந்தத் துண்டுகளைப் பிணைத்தது க்ரமாவஸ்தை அது பர்யாயேண ஸம்ஹிதாவஸ்தைக்கு வந்துவிடுமன்றோ. அப்படி செய்தும் எட்டம் போதவில்லையென்பது [தாமாகிலம் ஸம்ஹிதமபி] என்பதில் உள்ளுறையும் மருமம். க்ரதிதம் என்றோ ப்ரக்ரதிதம் என்றோ கூறாமல் ஸம்ஹித மென்ற ஆசிரியர்க்கு இந்த விவரணமன்றோ பரமபோக்யமாகும். வேதவைதேசிகரென்று ப்ரஸித்தரான தீக்ஷிதர்க்கு இது ஸுலமன்றோ. (6)

7. யாதவாப்யுதயத்திலேயே 4—128 காளியமர்த்தனகதையைச் சொல்லும் சுலோகம்:

*விவிதமுநிகணோபஜீவ்ய தீர்த்தா விகமிதஸர்ப்பகணா பரேணபும்ஸா*
*அபஜத யமுநா விசுத்திமக்ர்யாம் சமிதபஹிர்மதஸம்ப்லவா த்ரயீவ.*

7.யமுனையாற்றில் ஓர் மடுவிலிருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்கினியி; ஞல் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னும் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினனென்பது காளியமர்த்தன வரலாறு இவ்வரலாற்றை இந்த ச்லோகத்தினால் கூறினார். ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்வாமி ராமாநுஜர் செய்தருளின செயலையே கண்ணபிரான் செய்த செயலுக்கு உவமையாகக் காட்டியருளினர். எங்ஙனேயென்னில், ஐந்தலை வாய்நாகமாகிய காளியன் யமுனையாற்றைக் கலக்கிக் கெடுத்ததானது—விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம் போனபடியெல்லாம் கூறும் தவறான பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி எமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்ததானது—ஸ்வாமி ராமாநுஜர், பிறர் கூறின தவறான பொருள்களை யகற்றி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக ஆக்கினபடியாம். யமுனையாற்றின் ஸ்தானத்தில் வேதம் கொள்ளப்பட்டது: காளியன் ஸ்தானத்தில் குதர்க்கவாதிகள் கொள்ளப்பட்டார்கள்: கண்ணனுடைய ஸ்தானத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் கொள்ளப்பட்டார். *தூய பெருநீர் யமுனைத்துறைவனை* என்னும்படி யமுனையாறு இடையறாத பகவத் ஸம்பந்தத்தை யுடையதாயிருந்ததுபோல, வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடையதாயிருக்கையாலே வேதத்தை யமுனையாற்றின் ஸ்தானத்தில் கொள்வது பொருந்தும். குதர்க்கவாதிகளைக் காளியன் ஸ்தானத்தில் கொள்வதற்கான பொருத்தம் இனி உபபாதிக்கப்படுகிறது.

காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை உமிழ்ந்து நாசத்தை விளைத்தானென்று புராணங் கூறும். அப்படியே குதர்க்கவாதிகளும் ஐந்து விதமான துர்வாதங்களாலே பரமார்த்த நாசத்தை விளைவிக்கின்றனர். எங்ஙனே யென்னில்: (1) ஈச்வரனென்று ஒருவனைக் கொள்வது கூடாது; ஈச்வரனேயில்லை—என்பது ஒரு குத்ஸிதவாதம். (2) ஈச்வரனுளனென்று இசைந்தாலும் அவன் அநுமானத்தினால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்திரத்தால் ஸித்திப்பவனல்லன் என்பது மற்றொரு குத்ஸிதவாதம். (3) சாஸ்திரங்களைக் கொண்டே ஈச்வரனை அங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் விபூதியும் இல்லையென்பது வேறொரு குத்ஸிதவாதம். (4) ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை. பலபல ஈச்வரர்களுளரென்று பல தெய்வங்களுக்கு ஈச்வரத்வம் காட்டி வாதித்தல் இன்னுமொரு குத்ஸிதவாதம். (5) பிரபஞ்சமே கிடையாது, எல்லாம் சூனியம் என்று ஸர்வ சூன்யவாதம் பண்ணுகை ஸர்வோத்துங்கமான குத்ஸிதவாதம். ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்த வாதங்களினால் வேதத்தைக் கெடுத்த குதர்க்கவாதிகள் காளிய ஸ்தானத்திலே கொள்ளப்படுவது பொருந்தும். இக்கெடுதல்களையெல்லாம் நம் ஆசார்ய ஸார்வபௌமர் ஸதர்த்த நிரூபணங்களினாலே போக்கி யருளினர். இங்கே

மற்றொரு விசேஷமும் காணலாம். * வாய்த்த காளியன்மேல் நடமாடிய கூத்தனார் * என்று சூடிக்கொடுத்த சுடர்க்கொடி பணித்தபடி காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போல, ஸ்வாமி யெம்பெருமானுருடைய ஸம்பந்த ஸம்பந்தமுடைய நாம் *நாவலிட்டு உழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே*என்று தொண்டரடிப்பொடி யாழ்வாரருளிச் செய்த கணக்கிலே யமகிங்கரர்களின் தலையிலே அடியிட்டுக் கூத்தாடப் பெறுவோம். "ததங்யமத துர்மதஜ்வலிதசேதஸாம் வாதிநாம் சிரஸ்ஸுநிஹிதம் மயா பத மதக்ஷிணம் லக்ஷ்யதாம்" என்ற யதிராஜஸப்ததிஸூக்தியும் காண்க. ... ... ... ... (7)

## 8. கோதாஸ்துதியில் "கர்ணாம்ருதஸ்துதிசதை:" என்பது பற்றி.

கோதா ஸ்துதியில் சூடிக்கொடுத்த சுடர்க் கொடியின் திருக்குமறப் பெருமையைப் பல சுலோகங்களிற் பேசியிருந்தாலும் "தாதஸ்து தே மதுபித: ஸ்துதிலேசவச்யாத்" என்கிற பத்தாவது சுலோகம் மிகமேம்பட்டது. இந்த ச்லோகத்தின் கருத்தாவது, ஆண்டாளே! உம்முடைய திருத்தகப்பனாராகிய பட்டர்பிரான், ஸ்வல்ப ஸ்தோத்திரத்திற்கு வசப்படக் கூடியவனான எம்பெருமானிடத்தில் நின்றும் செவிக்கினிய செஞ் சொற்களை நூற்றுக்கணக்காகப் பாடின மற்றையாழ்வார்களாலே முன்பு அடையப்படாததான பெரியாழ்வாரென்னும் சிறப்புப் பெயரை. நீர் சூடிக்களைந்த மாலையை ஸமர்ப்பித்ததனால் அடைந்தார் என்பதாகும். ஆழ்வார்களுக்குள்ளே ஆண்டாளுடைய திருத்தகப்பனாரான பட்டர்பிரான் பெரியாழ்வாரென்று வழங்கப்படா நின்றார். இவ்வாழ்வார்க்கு எந்த அம்சத்தினால் பெருமை என்று ஆராய வேணும். மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்தவர்களான முதலாழ்வார்களும் திருமழிசைப்பிரான் நம்மாழ்வார் முதலானவர்களும் இவரைக்காட்டிலும் திருநக்ஷத்திரத்தில் பெரியவர்களாதலால் வயதினால் பெருமை இவர்க்குச் சொல்லவொண்ணாது; இனி எண்ணிக்கையில் அதிகமான பாசுரங்களை அருளிச் செய்வதனாலாம் பெருமையாவது சொல்லத்தகுமோ வென்று பார்க்கில், அவ்விஷயத்தில் நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாருமே பெருமை பெற்றவர்களாவர். ஆகவே, எக்காரணத்தினால் இப் பட்டர்பிரானுக்குப் பெரியாழ்வாரென்ற பெயர் வழங்கலாயிற்றென்று உணரவேண்டுவது அவசியமாயிற்று. ஆண்டாள் சூடிக்களைந்த பூமாலையை இவ் வாழ்வார் எம்பெருமானுக்கு நாடோறும் ஸமர்ப்பித்து வந்ததனால் மிகவும் திருவுள்ளமுவந்த எம்பெருமான் இவர்க்குப் பெரியாழ்வார் என்று விருது உண்டாகும்படி அருள்புரிந்தனர்—என்பதாகஸ்வாமி விவக்ஷித்து இந்த ச்லோகமருளினர். இதில் இரண்டாவது பாதத்தை "கர்ணாம்ருதை: ஸ்துதிசதை:" என்று வ்யஸ்தமாக ஓதிவருகிறார்கள். இது புராதன பாடமன்று. "கர்ணாம்ருதஸ்துதிசதை:" என்று ஸமஸ்தமாகவே ஆசிரியர்பணித்தது. அது பஹுவ்ரீஹிகர்ப்பமான பதமென்பதையுணராமல் இங்கு கர்மதாரய ஸமாஸமென்றெண்ணி ஸமஸ்தமாயிருப்பதிற்காட்டிலும் வ்யஸ்தமாயிருப்பதே யுக்ததரமென்றெண்ணி "கர்ணாம்ருதை: ஸ்துதிசதை:" என்று திருத்திவிட்டார்கள். நம்முடைய தேசிக க்ரந்தமாலா ஸ்தோத்ராவளி விபாகப்பதிப்பிலும் அப்பாடத்தையே நிவேசித்திருக்கிறோம். நம் இஷ்டப்படி பாடங்களைத் திருத்திவிட்டோமென்கிற பழிச்சொல் வாராமைக்குப் பெரும்பாலும் நவீனபாடங்களையே அதில் பதிப்பிக்கநேர்ந்தது. ஆனால் அது ஆசிரியருகந்தபாடமன்று என்பதை நம்முடைய கோதாஸ்துதி வியாக்யானத்தில் நிரூபணம் செய்திருக்கிறோம். இங்கு ஸாரமாகத் தெரிவிக்கிறோம். "கர்ணாம்ருதாநி ஸ்துதிசதாநி யேஷாம் தே-கர்ணாம்ருதஸ்துதிசதா:, தை: என்று விக்ரஹமாகக்கடவது. கர்ணாம்ருதமான ஸ்துதிசதங்களைப்பாடின மற்றையாழ்வார்களாலும்

[நம்மாழ்வாராலுங்கூட] அடையப்படாததான அநுக்ரஹத்தை இவ்வாழ்வார் பெற்றார் என்பது இங்கு விவக்ஷிதம். *இன்கவிபாடும் பரமகவிகளென்று சிறப்பித்துக் கூறப்பட்ட முதலாழ்வார்களுக்கும் *பாலேய்தமிழரிசைகாரர் பத்தர்பரவுமாயிரம்* தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்றும் சொல்லுகிறபடியே கர்ணாம்ருதஸ்துதி ததிகளைப்பாடின நம்மாழ்வார்க்கும், மற்றும் இத்தகையரான திருமழிசைப்பிரானுக்கும் குலசேகரப் பெருமாளுக்கும் கிடைக்காததான அநுக்ரஹத்தை ஆண்டாள் சூடிக்களைந்தமாலையை யுபஹரித்ததுகாரணமாக இவ்வாழ்வார் பெற்றார் என்பதுதான் இன்சுவைமிக்க பொருள். இப்பொருளுக்கு வ்யஸ்த பாடம் சேராது; ஸமஸ்தமானபாடமே சேரும். அன்றியும்வ்யஸ்தமான பாடத்தில் பிரபலமானவொரு அநுபபத்தியுமுண்டு; பெரியாழ்வார் தம்முடைய திவ்யஸூக்திகளை யெல்லாமருளிச் செய்தபிறகே ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை வடபெருங்கோயிலுடையானுக்கு ஸமர்ப்பித்ததாக வ்யஸ்தபாடத்தில் ஏற்படும். அது அஸங்கதம். பெரியாழ்வார் திருமொழியில் (2—2—6) *மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்தவண்டு, இன்னிசைக்கும் வில்லிபுத்தூரினிதமர்ந்தாய்!* என்கிற பாசுரத்தில் ஸூசிதமான இதிஹாஸம் முற்பட்டதேயொழியப் பிற்பட்டதன்று; பிற்பட்டிருந்தாலொழிய வ்யஸ்தமானபாடம் பொருந்தாது. பிற்பட்டதேயென்று ஸ்தாபிக்கப் பிரமாணமுமாகாது. "க்ருஹீதக்ராஹிணோ ஜடாச் சோசநீயா: (ஸ்ரீ)

## 9. ஸுபாஷிதநீவியில் இன்சுவைமிக்க பொருளொன்று.

*"ஏகயைவ குரோர் த்ருஷ்ட்யா த்வாப்யாம் வாபி லபேத யத்,*
*ந தத் திஸ்ருபிரஷ்டாபிஸ் ஸஹஸ்ரேணாபி கஸ்யசித்."*

என்கிற இந்த சுலோகம் ஆசார்ய கடாக்ஷத்தினுடைய பெருமேன்மையை விளக்கத் தோன்றியது. ஆசார்யனுடையவுட்கண்ணாகிய ஒரு கண்ணினாலோ, வெளிக்கண்ணாகிய இரண்டு கண்களாலோ அடையக்கூடியபேற்றை மூன்று கண்களாலும் அடைய முடியாது, எட்டுக் கண்களாலும் அடைய முடியாது. ஆயிரங் கண்களாலும் அடைய முடியாது. என்பது மூலத்தின் பொருள். முக்கண்ணன்—சிவபெருமான்; எண்கண்ணன்—நான்முகக் கடவுள். இவ்விரண்டும் நிர்விவாதமே. முடிவாக 'ஸஹஸ்ரேணாபி' என்று சொல்லியிருப்பதற்கு ஸஹஸ்ராக்ஷனாய் ஆயிரங்கண்ணுடையனான இந்திரன் விவக்ஷிதனாக வியாக்கியானம் பண்ணியுள்ளார்கள். இது விரஸம். இந்திரன் ஸஹஸ்ராக்ஷனேயாகிலும் இந்த ஸ்தலத்தில் அவனை ஸ்மரிக்க ஔசித்யமில்லை. ப்ராக்ருதச்லோகத்தில் ஞானவிகாஸத்தைப் பண்ணுகையென்னும் விஷயமன்றோ விவக்ஷிதமாகவுள்ளது. சதுர்முகப்ரஹ்மா ஸரஸ்வதீவல்லபனாய் நால்வேதக்கடலையும் கரைகண்டவனாகையாலே ஜ்ஞானவிகாஸனத்தில் அவனுக்கு ப்ரஸக்தியுண்டு. பரமசிவன் ஸர்வஜ்ஞனென்று பேர்பெற்றவனாகையாலும், * ஈச்வராத் ஜ்ஞானமந்விச்சேத் * என்று சொல்லப்பட்டிருப்பதனாலும், நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் * நுண்ணுணர்வின் நீலார் கண்டத்தம்மான் * என்று ஞானச்சிறப்பைக் காட்டியருளிச் செய்திருக்கையாலும் அவனுக்கும் ஜ்ஞான விகாஸனத்தில் ப்ரஸக்தியுண்டு. இந்த பத்ததியில் இந்திரன் நினைவுக்கு வர ப்ரஸக்தியே கிடையாது. மேலும், இங்கே சிவனை முன்னே சொல்லி, அவனிலும் மேம்பட்ட பிரமனை அவனுக்கடுத்தபடியாகச் சொல்லி, இவ்விருவர்களினும் தண்ணியனான இந்திரனைப் பிறகு சொல்ல ஔசித்யமுமில்லை. ஆகவே * ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ: * என்று புருஷஸூக்தத்திலும் * தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க் கண்களா

யிரத்தாய்* என்று திருவாய் மொழியிலும் ஆயிரந் திருக்கண்களையுடையவனாகச் சொல்லப் பட்ட ஸ்ரீமந்நாராயணனே இங்குப் பொருளாகத்தகும். ஆசார்ய கடாக்ஷத்தாலே உண்டாகும் பேறு த்ரிமூர்த்திகளின் கடாக்ஷத்தாலுமுண்டாகாது என்று சொல்லுவதே இங்கு ஆசிரியர்க்கு உத்தேச்யமானது. இதுவே ரஸவத்தரம். ... ... (9)

## 10. ஹம்ஸஸந்தேசத்தில் (ச்லோ 1—49ல்) பொருளுண்மை காட்டுதல்.

ஹம்ஸஸந்தேசகாவ்யத்தில் "நித்யாவாஸம் வ்ருஷபமசலம் ஸௌந்தராக்யஸ்ய விஷ்ணோ:......பாதோ திவ்யம் பசுபதிஜடாஸ்பர்சசூந்யம் விபாதி" என்கிற சுலோகத்திற்குத் தாத்பர்யமெழுதி வெளியிட்ட தேசிகபக்தம்மந்ய பண்டிதர்கள் "திருமாலிருஞ்சோலை மலையில் பெருகும் நூபுரகங்கையானது அழகருடைய திருவடிச் சிலம்புகளிலிருந்து வருகின்ற கங்கை யேயாயினும் பகவானாகிற பசுபதியினுடைய சிரஸ்ஸ்பர்சமாகிற சுத்தியேற்றம் இதற்கில்லை யென்று தேசிகன் நூபுரகங்கையினுடைய நிஹீநதையைப் பேசுகிறார்" என்றெழுதி ஸ்ரீஹயக்ரீவப்ரியா பத்ரிகை மூலமாக (1952ல்) வெளியிட்டார்கள். அப்போது நாம் வெளியிட்டு உலக முகந்தவியாஸம் இங்கு அநுபவிக்கத்தக்கது.

*நித்யாவாஸமென்று தொடங்கியுள்ள ஹம்ஸஸந்தேச ச்லோகத்தினால் தூதுவிடப்படு கிற ஹம்ஸத்தை நோக்கித் திருமாலிருஞ்சோலையழகரை வழியிடையில் சேவிக்குமாறு கூறப் படுகிறது. அங்குப்பெருகுகிற சிலம்பாறென்கிற நூபுரகங்கையானது ஒன்றான கங்கையிற் காட்டிலும் புனிதமானதென்று கொண்டாடப்படுகிறது. கங்கைக்கு பசுபதிஜடாஸ்பர்ச மாகிற ஒரு குறையுண்டு; நூபுரகங்கைக்கு அக்குறைதானும் கிடையாதென்று புகழ்ச்சியே இங்குள்ளது. ச்லோகத்திலிருந்து இப்பொருள் ச்ரமப்பட்டு அறியக்கூடியதன்று; அநாயாஸமாக அறியக்கிடக்கும் பொருள் இதுவே. இந்த நூபுரகங்கையானது பெருமானுடைய திருவடியி னின்று பெருகுகின்ற கங்கையேயாயினும் பரமசிவனுடைய சிரஸ் ஸம்பந்தம் பெறாதபடியினா லே சுத்தியோகம் சூன்யமாகப்பெற்றது என்று ஒரு பெரிய குறையையேற்றி தேசிகன் இந்த ச்லோகம் பணித்திருப்பதாக எழுதுவது ஸங்கதமாகாது. எம்பெருமானுடைய ஸ்ரீபாததீர்த்த மான கங்கைக்கு பசுபதியின் சிரஸ்ஸம்பந்தத்தினால் சுத்தி ஏற்பட்டதாகவும் அது கங்கைக்கு ஓர் ஏற்றமாகவும் காட்டி அப்படிப்பட்ட ஏற்றம் நூபுரகங்கைக்கு இல்லையென்று இங்கே குறை கூறப்படுகிறதாகப் பொருள் விவரிப்பது ஸ்ரீவைஷ்ணவ ப்ருந்தத்தில் ஒருவராலும் ஏற்கத்தக்க தாகாது. தேசிகதிவ்ய ஸூக்திக்கு இது நேர் விபரீதமுமாகும். தேசிகனுடைய தேஹளீசஸ் துதியில் 12, 13ம் ச்லோகங்களை யநுஸந்தித்தால் இப்பொருள் அஸங்கதமென்று எளிதாக அறுதியிடலாகும். *ஸத்குர்வதாம் தவ பதம் சதுராநநத்வம் பாதோதகஞ்ச சிரஸா வஹதாம் சிவத்வம் *என்றும், * பாதஸரோஜதஸ் தே மந்தாகிநீ விகலிதா மகரந்ததாரா......புண்யா பபூவ புரசாஸநமௌலிமாலா * என்றும் அந்தக்ரந்தத்திலுள்ளதன்றோ. வரதராஜ பஞ்சாசத் திலும் *விமலேந யஸ்ய பாதோதகேந வித்ருதேந சிவா பவந்தி * என்று சமத்காரமாகவும் அருளிச் செய்தார். இவற்றுக்கெல்லாம் சிகரமாக ஸ்தோத்ரபாஷ்யத்தில் * கஸ்ய பாதோதகேந ஸ சிவஸ் ஸ்வசிரோத்ருதேந * என்றவிடத்தில் அபார்த்த நிரஸநபூர்வகமாகும் யதார்த்தமான பொருள் நிலை நாட்டப்பட்டுள்ளது. அங்கு முடிவான ஸ்ரீஸூக்தி—"அத ஏவ * ஹரஸ்ய காத்ரஸம்ஸ்பர்சாத் பவித்ரத்வமுபாகதா இத்யத்ராபி ஹரஸ்ய சுத்திப்ரதத்வம் உபாகதேதி போத்தவ்யம்" என்றுள்ளது. இத்தனை ஸ்ரீஸூக்திகளுக்கு விருத்தமாக எழுதியுள்ள பொருள் ஆதரணீயமாகுமா? ... ... ... ... (10)

## 11. இடையில் ஓர் அற்புதமான கனவு

இந்த நிகமாந்த குருஸூக்தி ரஸாநுபவப் பதினெட்டை அடியேனெழுதத் தொடங்கினது 25—11—66 தேதியன்று. இதில் முதல்வியாஸம் தேஹளீசஸ்துதியில் (பண்ணுதட) பாடபரிஷ்காரத்தைப்பற்றியது. அது 30—11—66ல் அச்சேறிற்று [அதற்கு மறு நாளிரவு கனு.] திருக்கோவலூரில் அவதரித்து அங்கு நெடுநாள் வாழ்ந்தவரும், சில பலவாண்டுகளாகக் கள்ளக்குறிச்சியில் வாழ்பவரும், அத்விதீயவிவேககுசலருமான ஸ்ரீ உவே. T. ஆராவமுதுதாதாசாரியர் ஸ்வாமி (அட்வகேட்) மேலே குறித்த பண்ணுதடபரிஷ்கார வியாஸத்தைக்கடாக்ஷித்துவிட்டு (ஸ்வப்நே)

"புண்யா என்கிற பாடந்தான் ஆசிரியர்க்கு விவக்ஷிதமென்பது அந்த தேஹளீசஸ்துதியிலேயே பதின்மூன்றுவது சுலோகத்திலே ஸ்வ்யக்தமாகக் காண்கிறதே" என்றார்;

உடனே கண்விழித்தெழுந்து அந்தப் பதின்மூன்றுவது சுலோகத்தையெடுத்து ஸேவித்தேன் "பக்தோபரோதஸஹ. பாதஸரோஜதஸ் தே மந்தாகிநீ விகஸிதா மகரந்ததாரா, ஸத்யஸ் த்ரிவர்க்கபவர்க்கமபி க்ஷரந்தி புண்யா பபூவ புரசாஸநமௌளிமாலா" என்பது அந்தச்லோகம். இதில் 'புண்யா பபூவ' என்பதற்கு --பெண்ணையாருக ஆயிற்று என்பதுதான் பொருள் ❖ ம்ருத்யுஞ்ஜய: க்ருத்திவாஸா: பிநாகீ ❖ என்ற அமரகோசத்தின்படி பரமசிவனுக்குப் பிநாகியென்று பெயர். அவனுடைய ஸம்பந்தத்தையிட்டே நதிக்குப் பிநாகிநியென்று பெயராயிற்று. ஆசிரியர் ❖ புரசாஸந மௌளிமாலா ❖ என்று விசேஷணமிட்டு இதை நிரூபித்தே (புண்யா பபூவ) என்றார். ஆகவே புண்யா என்று அடியேன் சுதந்திரமாகத்திருத்தினதன்றென்பது பிராமாணிகர்களுக்கு உரை வெளிதாயிற்று. ... ... ... *

## திருவோண விழாப்பெருமை

இருபத்தேழு நக்ஷத்திரங்களுக்குள் இரண்டு நக்ஷத்திரங்களே சிறந்தவை—திருவாதிரையும் திருவோணமும். திடீரென்று ஒருவனையழைத்து அச்வினி பரணிசொல்லு என்றால் சொல்லிவருகையில் மிருகசீருஷம் திருவாதிரை..........உத்தராடம், திருவோணம் என்றே சொல்லுவன். இந்த இரண்டு நக்ஷத்திரங்களுக்குத்தான் (திரு) இயற்கையிலேயே கூடியுள்ளது. திருவோணத்தைப்பற்றி இப்போது சொல்லுகிறோம். "ச்ரோணு நக்ஷத்ரம் விஷ்ணுர் தேவதா" என்று வேதமாகையாலே விஷ்ணு நக்ஷத்ரமென்பது முதற்பெருமை. பொய்கையாழ்வாரவதரித்த நக்ஷத்ரமென்பது இரண்டாவது பெருமை. பிள்ளை லோகாசாரியர் அவதரித்ததென்பது மூன்றுவது பெருமை நிகமாந்தமஹாகுரு அவதரித்ததென்பது நான்காவது பெருமை ஆக இந்த நான்கு பெருமைகளையும் சிந்தனை செய்து கொண்டு திருவோணந்தோறும் ஸ்ரீவைஷ்ணவர்களின் திருமாளிகைதோறும் நாலெட்டு பத்துபேர்களாவது ஒன்றுகூடி குணநுபவம்செய்து கோஷ்டி நடத்த வேண்டியது மிக மிக அவசியம். நகரங்கள் தோறும் அக்ரஹாரங்கள் தோறும் இங்ஙனே நடைபெற வேண்டும். ஸ்ரீராமாநுஜன் வெளியீடு. [ப்ர.அ] 10-12-66

## யதிராஜஸப்ததியில் முக்கியமான பரிஷ்காரங்கள்.

12. யதிராஜஸப்ததியின் முடிவில் "கரதலாமலகீக்ருத" இத்யாதிச்லோகத்தில் ஸத்கதா: என்பது பாடமேயல்லது ஸத்பதா: என்பது பாடமன்று. ஸத்கதையாவது சிறந்த ஐதிஹ்யங்கள். இந்த ஸப்ததியில், பலச்லோகங்களில் சிறந்த ஐதிஹ்யங்கள் கையிலங்கு நெல்லிக்கனியாம்படி ஸ்வாமி செய்தருளியிருப்பதனால் அதைக்காட்டினபடி. ஸத்பதா: என்கிறபாடம் ஒருபடியாலும் சேராது. அடுத்த விசேஷணம் *ச்ருதிவதம்ஸிதஸௌஹ்ருதஸௌக்தய:* என்பது. இங்கு. ச்ருதியென்பதற்கு வேதமென்கிற பொருள் முக்கியமன்று காது என்கிற பொருளே முக்கியம், பல மெய்யுரைகளைக் கர்ணபரம்பரயா கேட்டவர்கள் என்றபடி. "யதிபுரந்தரஸப்ததிஸாதரா:" என்பது விசேஷ்யபதமாதலால் இந்த ஸப்ததியை ஆதரித்து ஓதுமவர்கள் நல்ல ஐதிஹ்யங்களைக் கரதலாமலகமாகக் காண்பார்கள்; இதிலிருந்து பல மெய்யுரைகளைப் பெரியார் எடுத்துக்கூற காதுகுளிரக் கேட்பார்கள் என்றபடி. *ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச;* என்பதிலே ஸ்வாமி யெம்பெருமானார் யாதவப்ரகாசரை உஜ்ஜீவிப்பித்த ஐதிஹ்யம் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. *வந்தே தம் யமிநாம் துரந்தரமஹம்* என்றச்லோகத்தில் *தத்தம் யேந தயாஸுதாம்புநிதிநா பீத்வா விசுத்தம் பய: காலே ந: கரிசைலக்ருஷ்ணஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி* என்றதில் எம்பெருமானார் சாலக்கிணற்றினின்று நித்யம் திருமஞ்சனம் கொணர்ந்து ஸமர்ப்பித்துக்கொண்டிருந்த ஐதிஹ்யம் பெரியார் எடுத்துக்கூறக் கேட்கலாகிறது. ... ... ... (12)

13. *விகாஹே யாமுநம் தீர்த்தம்...யத்ர க்ருஷ்ண: க்ருதாதர:* ஆளவந்தார் விஷயமான இங்கஸ்துதிபத்யத்தில் *யத்ர க்ருஷ்ண: க்ருதாதர:* என்றதில் குருகை காவலப்பனிடத்து நிகழ்ந்த மிகவற்புதமான ஓர் ஐதிஹ்யம் காட்டப்படுகிறது. 'குருகைகாவலப்பனிடத்திலே யோகரஹஸ்யம் பெறக்கடவீர்' என்று மணக்கால் நம்பி முன்பு நியமித்திருந்ததை நினைத்த ஆளவந்தார், அப்பன் யோகத்திலேயெழுந்தருளி யிருக்குமிடமான கங்கைகொண்ட சோழபுரத்தேறச் செல்ல, அப்பனும் அங்கே ஒரு குட்டிச் சுவரிலே யோக நிரதராய் எழுந்தருளியிருக்க, அப்போது அவருக்கு ஸமாதிபங்கம் பண்ணவொண்ணாதென்றெண்ணிய ஆளவந்தார் அந்தச் சுவர்க்கு இப்பால் நிற்க, யோகநிஷ்டரான அப்பனும் திரும்பிப் பார்த்து 'இங்குச் சொட்டைக் குலத்தார் ஆரேனும் வந்தாருண்டோ?' என்று கேட்க, உடனே ஆளவந்தார், அடியேன்! என்று எதிரே சென்று தெண்டன் ஸமர்ப்பித்து 'அடியேன் இங்கு விடைகொண்டது தேவரீருக்குத் தெரியாதபடி பின்னேநிற்க, தேவரீர் அறிந்தது எங்ஙனே?' என்ன, அதற்குக் குருகைகாவலப்பனருளிச்செய்த வார்த்தை:—எம்பெருமானும் நானுமாக அநுபவித்துக் கொண்டிருந்தால் பெரிய பிராட்டியார் திருமுலைத் தடத்தாலே நெருக்கியணைத்தாலும் அவளது முகத்தையும் பாராத ஸர்வேச்வரன் என் கழுத்தையமுக்கி நாலு மூன்றுதரம் நீரிருந்த பக்கமாக எட்டிப்பார்த்தான்; அப்படி அவன் பார்க்கும்போது சொட்டைக் குலத்தார் ஆரேனும் வந்திருக்கவேணும் என்றிருந்தேன் காணும் என்றார். [ஸ்ரீமந்நாதமுனிகளின் குலம் சொட்டைக்குலமெனப்படும். ஆழ்வார் பக்கலில் எம்பெருமான் பண்ணியிருந்த விசேஷ கடாக்ஷம் அவர்க்குப்பிறகு ஸ்ரீமந்நாதமுனிகள் திருவம்சத்தில் பெருகத் தொடங்கிற்றென்பது இங்கு அறியத்தக்கது.]

*10

இவ்வைதிஹ்யம் திருவாய்மொழியில் (2—7—2.) *எங்கும் பக்கநோக்கறியான் என்பைந்தாமரைக் கண்ணனே* என்றவிடத்து ஈடுமுப்பத்தாறுயிரத்தில் விஸ்தரேணவும், பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்துநாலாயிரத்தில் ஸங்க்ரஹேணவும் ஸேவிக்கத்தக்கது. தேசிகன் காலத்தில் ஈட்டுக்கு ப்ரசாரமில்லாமையினுல் இருபத்துநாலாயிரத்தில்தான் ஸ்வாமி ஸேவித்ததென்க. கர்ணபரம்பரயா ச்ரவணமுமொன்றுள்ளதே. "க்ருஷ்ண: க்ருதாதர:" என்பதற்கு *ஸ்ரீமத்க்ருஷ்ண ஸமாஹ்வரான பெரியவாச்சான்பிள்ளையையும் பொருளாகக் கூறுவதுண்டு; ஸ்தோத்ரரத்னவ்யாக்யாநமுகேந யாமுநே க்ருதாதரஸ் ஸ இதி. இது நிற்க. முந்தின அர்த்தம் பரமபோக்யம். ... ... (13)

## 14. ஸப்ததியில் ஐம்பத்துநான்காம் சுலோகம்

## *யதாபூதஸ்வார்த்தா யதிந்ருபதிஸூக்திர் விஜயதே*

14. இதில் "கௌதஸ்குதகலஹ கோலாஹலஹத த்ரிவேதீ நிர்வேதப்ரசமந விநோதப்ரணயிநீ* என்றவிடத்தில் 'த்ரிவேதீ' என்பதற்கு ருக்யஜுஸ்ஸாமங்களாகிற மூன்று வேதங்களென்று அர்வாசீநர்கள் கூறும் பொருள் எடுத்துக் கழிக்கவும் தகாதது. உண்மைப்பொருள் கேண்மின், த்ரயாணும் வேதாநாம் ஸமாஹார:- த்ரிவேதீ என்கிற ஸமாஸத்தில் விப்ரதிபத்தியில்லை. மூன்று வேதங்களாவன- மூன்று ச்ருதிகள். பேதச்ருதி, அபேதச்ருதி, கடகச்ருதி— என்னுமிவையே அவை. *க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர:* *த்வா ஸுபர்ணு* இத்தியாதிகள் பேதச்ருதிகளெனப்படும். *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* *ஐததாத்ம்யமிதம் ஸர்வம்* தத் த்வமஸி* இத்தியாதிகள் அபேதச்ருதிகளெனப்படும். *யஸ்ய ப்ருதிவீ சரீரம்...... யஸ்யாத்மா சரீரம்* இத்யாதிகள் கடக ச்ருதிகளெனப்படும். அத்வைதிகள் பேதச்ருதிகளுக்கு க்ஷதியை விளைத்தார்கள். த்வைதிகள் அபேத ச்ருதிகளுக்கு க்ஷதியை விளைத்தார்கள். இவ்வுபயரும் கடகச்ருதிகளுக்கு அத்யந்தக்ஷதியை விளைத்தார்கள். யதிந்ருபதிஸூக்தியானது கடகச்ருதியைக்கொண்டு பேதச்ருதியையும் அபேதச்ருதியையும் விரோதலவலேசமின்றிக்கே ஸமந்விதமாக்கினபடியாலே ஒரு ச்ருதியையும் க்ஷதமாக்காமலே வெற்றிபெற்றதாயிற்று. ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் (2-94) *பிதோ பேதம் தத்வேஷ்வபிலபதி பேதச்ருதி:* என்கிற சுலோகத்திஞல் ஸ்வாமிதாமே இவ்வர்த்தத்தை விளக்கியருளினபடியால் *த்ரிவேதீ நிர்வேதப்ரசமநம் ஏவம்விதமாகத்தான் ஸ்வாமிக்கு விவக்ஷிதமென்பதை நிர்மத்ஸரர்களான ப்ராமாணிகர்கள் இசைந்திடுவர்கள். ரஹஸ்யத்ரயஸார-ப்ரதாநப்ரதிதந்த்ராதிகாரத்தில் *யத்யேதம் யதி ஸார்வபௌமகதிதம் ..... *இத்யாதி ச்லோகரத்நமருளிச் செய்த ஸ்வாமி திருவுள்ளத்திற்கு வேறுவகையான அர்த்தம் அபிமதமாவதற்கிடமில்லை. ... ... (14)

## 15. ஸப்ததியிலேயே அறுபத்துநான்காவது சுலோகம்

## *லிப்ஸே லக்ஷ்மணயோகிந: பதயுகம்* என்கிற ச்லோகரத்னம் ஸ்வாமிக்குத் திருப்பாவை ஜீயரென்னுந் திருநாமத்தை விவரிக்க அவதரித்தது.

15. அலங்கார சாஸ்த்ரத்தில் பர்யாயோக்தமென்பது ஓர் அலங்காரம். *பர்யாயோக்தம் து கம்யஸ்ய வசோ பங்க்யந்தராச்ரயம்* என்று தல்லக்ஷணமுக்தம். *நமஸ்தஸ்மை க்ருதௌ யேந முதா ராஹுவதூகுசௌ* என்பது அதற்கு லக்ஷ்யம். அறிவிக்க

படுவதாகின்றது என்றதாயிற்று. ச்லாக்யேத என்கிற க்ரியைக்கு இப்பொருள் தவிர மற்று எந்தப்பொருளிலும் பொருத்தம் காண இயலாது. தேவப்பெருமாளுடைய தேஜஸ்ஸின் உயர்த்தியை பூர்வார்த்தத்தில் இரண்டு விசேஷணங்கள் நிலைநாட்டுவதால் நான்காவது பாதத்தில் கூறிய விஷயத்திற்கு அவை உபபாதகங்களாயின. அப்பயதீக்ஷிதர் தாம் செய்த வரதராஜஸ்தவத்தில் "பாநுர் நிசாஸூ பவதங்க்ரிஸரோஜசோபாலோபாத்" இத்யாதி ச்லோகமிட்டிருப்பது இந்த ரஸ்யமான தாத்பர்யத்தை உட்கொண்டேயாம்.

## 18. ந்யாஸதிலகத்தில் (ச்லோ. 21ல்) *தேசிகேந்த்ரோ தயாலு:* என்கிற பாடபரிஷ்காரம்.

18. *அந்தோநந்தக்ரஹணவசகோ யாதி ரங்கேச யத்வத் பங்குர் நௌகாகுஹர நிஹிதோ நீயதே நாவிகேந, புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி: த்வத்ஸம்ப்ராப்தௌ ப்ரபவதி ததா தேசிகேந்த்ரோ தயாலு:.* என்றிருந்தபாடம் 'தேசிகோ மே தயாலு:' என்று மாறுபட்டுள்ளது. உண்மைப் பாடத்தின் உபபத்தியை விவரிக்கக் கேண்மின். இந்த ச்லோகத்திற்கு அடுத்ததான *உக்த்யா தநஞ்ஜயவிபீஷண* இத்யாதி ச்லோகத்தில் 'லக்ஷ்மணமுநே:' என்று எம்பெருமானாருடைய நிர்தேசம் ஸ்பஷ்டமாகவுள்ளது. அதற்குமுந்தின இந்த ச்லோகத்திலும் 'தயாலு: தேசிகேந்த்ர:' என்று அந்த எம்பெருமானாரே நிர்தேசிக்கப்படுகிறார். இந்த ச்லோகத்திற்கு அடுத்த ச்லோகம் உபபாதகமென்பது முன்னம் குறிக்கொள்ளத்தக்கது. நாமெல்லாரும் பகவத் ப்ராப்தி பெறுதற்கு எம்பெருமானாரே கடவர் என்கிற அர்த்தமே இவ்விரண்டு ச்லோகங்களுக்கும் உயிரான விஷயம். ரஹஸ்யத்ரயஸாரத்தில் அதிகாரி விபாகாதிகாரத்தில் *அந்தோநந்தக்ரஹணவசக:* என்னுமிந்த ச்லோகத்தைப் பூர்த்தியாகவெழுதி "என்று ந்யாஸதிலகத்திலே சொன்னோம்" என்றருளிச் செய்கிறார். இதற்குமுன்னும் பின்னுமுள்ள வாக்யங்கள் நல்ல தெளிவு பிறப்பிப்பன. முந்தின வாக்யமாவது—"ஒரு மலையில் நின்று ஒரு மலையிலே தாவும் ஸிம்ஹசரீரத்தில் ஜந்துக்களைப்போலே பாஷ்யகாரர் ஸம்ஸார லங்கனம்பண்ண அவரோடுண்டான குடல்துடக்காலே நாம் உத்தீர்ணராவுதோமென்று முதலியாண்டானருளிச்செய்த பாசுரம்" என்பதாம். பிந்தின வாக்யமாவது—"ஏதேனுமொரு ப்ரகாரமாகவுமாம்; ஆரேனுமொருவர் அநுஷ்டிக்கவுமாம்; ப்ரபத்திக்கல்லது ஸர்வேச்வரன் பரமபுருஷார்த்தங்கொடுக்க இரங்கானென்றதாயிற்று" என்பதாம்.

ப்ரக்ருதமான *அந்தோநந்தக்ரஹண* என்கிற ச்லோகத்தில் மூன்று பாதங்களில் மூன்று த்ருஷ்டாந்தங்கள் இடப்பட்டன. குருடனுக்குக் கண் தெரிந்தவன் வேணுமென்கிற ப்ரதமத்ருஷ்டாந்தத்தினால் தேசிகேந்த்ரருடைய ஜ்ஞானபூர்த்தி சொல்லிற்று. நொண்டிக்கு நாவிகனுடைய உதவிவேணுமென்கிற த்விதியத்ருஷ்டாந்தத்தினால் ஆசார பூர்த்தி சொல்லிற்று. இனி த்ருதீயத்ருஷ்டாந்தத்தினால் என்ன சொல்லப்படுகிறதென்று நோக்கவேணும். ஒரு மஹாப்ரபுவினிடத்தில் ஸேவை செய்த அமாத்யனுடைய ஸஞ்சித த்ரவ்யராசியினால் அவனுடைய புத்ரபௌத்ர நப்த்ரு பரம்பரைகள் நெடுங்காலம் வாழ்ந்து வருவதுபோல—என்கிற இந்த த்ருஷ்டாந்தம் எதற்காக இடப்பட்டது? ப்ரபுவின் ஸ்தானத்திலே ஸ்ரீரங்கநாதனும், அமாத்யனுடைய பதவியில் எம்பெருமானாரும், அபத்ய பரம்பராஸ்தானத்தில் அஸ்மதாதிகளும் கொள்ளப்பட்டாலொழிய இந்த த்ருஷ்டாந்தம்

பொருந்தாதன்றே. ரங்கப்ரபுவினிடத்தில் பகவத்ராமாநுஜஸசிவர் ஸேவை செய்து என்ன ஸம்பாதித்துச் சேமித்துவைத்தார்? என்று கேட்பார்க்கு விடை யிறுப்பதன்றே அடுத்தச்லோகம். அதில் "லக்ஷ்மணமுநே: பவதா விதீர்ணம் வரம்" என்பது உயிரானது. முதலியாண்டான் பாசுரமாக முன்னேயெடுத்துக் காட்டினதில் எம்பெருமானுரோடு ஸாக்ஷாத் ஸம்பந்த மின்றிக்கே அத்யந்த வ்யவஹித ஸம்பந்தமுடையாரும் உத்தீர்ணராக முடியுமோ? என்கிற சங்கைதோன்ற அதற்குப் பரிஹாரமாகவன்றே *புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி:* என்கிற த்ருஷ்டாந்த மிட்டருளிற்று. இதில் (அவிதிதந்ருப:) என்கிற விசேஷணம் எதற்காக இடவேணும்? அஜஹல்லக்ஷணையினுலே (அவிதிதஸேவக:) என்று மன்றே இங்குக்கொள்ளப்பட வேண்டும். ராஜஸேவை செய்த அமாத்யனுடைய ஸந்ததியார் உதாரனுன ராஜாவையும் பார்த்திருக்கவேண்டியதில்லை. ஸேவகனுன அமாத்யனையும் பார்த்திருக்கவேண்டியதில்லை. சேமித்துவைத்த பொருளினுலே அவிச்சிந்நபரம்பரையாய் ஜீவனம் நடைபெறுகிறது. அப்படியே எம்பெருமானுர்கொண்ட வரத்தினுலே அவருடைய ஸம்பந்த ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும் உஜ்ஜீவனம் இடையறுது நடந்து வருகிறது—என்பதே இங்கு ஆசிரியர்க்கு விவக்ஷிதமாதலால் (தேசிகேந்த்ரோ தயாலு:) என்கிற ப்ராசீந பாடமே பரிக்ராஹ்யம். உடையவர் தனியனில் *தயைகஸிந்தோ:* என்றதை நோக்கி (தயாலு:) என்றது. ... ... ... (18)

ஸ்ரீ காஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய
அஷ்டாதசாஷ்டாதச மஹார்த்தநிதியில் நிகமாந்தகுரு
ஸ்ரீஸூக்திரஸாநுபவப் பதினெட்டு
முற்றிற்று

## திருப்பாவையுபந்யாஸம்

16—12—66 வெள்ளிக்கிழமையன்று உதயம் தநுர்மாஸ ப்ரவேசம். அன்று முதலாக முப்பதும் தப்பாமே நாடோறும் மாலை 6 மணிமுதல் சென்னை கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் ராமாநுஜ கூடம் ஹாலில் ஸ்ரீராமாநுஜன் பத்ராதிபருடைய உபந்யாஸம் வழக்கப்படி நடந்துவர சென்னை ஸத்காலக்ஷேப ஸபையார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆஸ்திகர்கள் இதில் அந்வயித்து ஆனந்திப்பார்களாக. 15—12—66 to 12—1—67 P.B.A. ஸ்வாமியின் விலாஸம் கீழ்க் கண்டபடி. **ஸ்ரீ P. B. அண்ணங்கராசாரியர்ஸ்வாமி**, 48, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, மதராஸ்-1.

இப்படிக்கு,

**ஸ்ரீராமாநுஜன் கார்யதரிசி,**
10-12-66.

# 3—12—66ல் சென்னை ஸைதாபேட்டையில் திருவத்யயன விசேஷம்.









ஸ்ரீமதுபயவே. அகரம். கந்தாடை பாஷ்யகாராசார்யஸ்வாமி 21—11—66ல் திருநாடலங்கரித்தார்.

ஞானசீலவயோவ்ருத்தர்களில் தலைவராயெழுந்தருளியிருந்தவர் இங்கே ஸேவைஸாதித்தருள்கின்ற பாஷ்யகாராசாரியர்ஸ்வாமி. காஞ்சீபுரத்திற்கும் ஸ்ரீபெரும்பூதூர்க்கும் இடையிலுள்ள தென்னேரி யகரமென்று ப்ரஸித்தமான அக்ரஹாரத்தில் திருவவதரித்து அங்கே சிலகாலமும் பெருமாள்கோயிலில் பெரும்பாலும் எழுந்தருளியிருந்தவர். இளமையிலேயே நாலாயிர திவ்யப்ரபந்த பூர்ணாதிகாரியாய் பகவத்விஷய ரஹஸ்யாதிகளைக் கசடறக் கற்றவர்களில் தலைசிறந்து விளங்கினவர். ஆத்மகுண பரிபூர்த்தியில் நிகரற்றுப் பரம ஸாத்விக அக்ரேஸரரென்னுங் காரணத்தினால் அடியேனுடைய மதிப்புக்கு விசேஷித்துக் கொள்கலமாயிருந்தவர். ஸ்ரீமதித்யாதி. அண்ணாவிலப்பன் குமாரவேங்கடாசார்யஸ்வாமியின் திருவடி ஸம்பந்தியானவிவர் ஆசார்யபக்தியிலும் ஆழ்ந்தவர். தினப்படியாக அதிககாலம் அருளிச்

செய்லநுஸந்தானமே போதுபோக்காயிருந்தவர். எண்பத்திரண்டு திருநக்ஷத்ரமெழுந்தருளியிருந்து நிகழும் கார்த்திகைமாதம் சுக்லநவமியில் திருநாடலங்கரித்தார். இவர்க்கு ஔரஸபுத்திரர் இல்லாமையினால் கநிஷ்டஸஹோதரப்ராதாவின் குமாரரை ஸ்வீகாரம் செய்துகொண்டு அவரை மிகவும் அபிவிருத்திக்குக் கொண்டுவந்தார். அவருடைய பெயர் ஸ்ரீமான் A. ராமாநுஜாசாரியர். புதுடில்லியில் சிறந்த உத்யோகபதவியில் வாழ்பவர். ஸமீபகாலத்தில் அடியேனால் "**ஆஸ்திகதுரீணர்**" என்று விருதுவழங்கப்பெற்றவர். டில்லி மாநகரில் ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்த ப்ரசாரத்திற்கு உறுதுணையாயிருப்பவர். கிம்பஹுநா? ஸம்ப்ரதாய தத்துவமறிந்த மஹாவிவேகியென்று ஒரே வார்த்தையில் முடிக்கிறேன்.

பலவாண்டுகளாய் ஸ்ரீ காஞ்சியில் வாழ்ந்த திருத்தகப்பனாரை இரண்டொரு ஸம்வத்ஸரமாய் சென்னைக்கடுத்த ஸைதாபேட்டையில் தம்முடைய ஸொந்தக்ருஹத்தில் எழுந்தருளியிருக்கச்செய்து தமது குமாரர்களில் ஒருவரைக்கொண்டு சுச்ரூஷிக்கச்செய்து வந்தார். பித்ருபக்தியில் தலைநின்ற ராமாநுஜாசாரியர் டில்லியிலிருந்து அடிக்கடிவந்து திருத்தகப்பனாருடைய திருமேனிநிலையைக் கவனித்துவந்தார். அவர் பரமபதித்த செய்தியறிந்ததும் நாலைந்துமணிகாலத்திற்குள் ஸகுடும்பமாக ஸைதாபேட்டை வந்து சேர்ந்து திருத்தகப்பனாருடைய சரமகைங்கரியத்தை மஹோந்நதரீதியில் நடத்தினார். வைதிகக்ரியாகலாபங்கள் எள்ளளவும் அநுகல்பமன்றிக்கே முக்யகல்பமாகவே நடத்தப்பட்டன. பதின்மூன்றுநாளில் திருவத்யயனத்தை ஒரு மஹோத்ஸவமாகவே நடத்தினார்; ஏறக்குறைய பதினைந்து திவ்யதேசங்களிலிருந்து திருப்பரிவட்டபஹுமானங்கள் வந்திருந்தன. இயல்கோஷ்டியின் திருவுருவப்படங்களை ஈண்டு ஸேவிக்கிறீர்கள். இடையில் திருப்பரிவட்டங்களணிந்து விலக்ஷணமான திருமண்காப்புடனே திகழ்பவர் தாம் கர்த்தாவான ராமாநுஜாசாரியர். ஸ்வாசார்ய வம்சஸ்தர்களான ஸ்வாமிகளிருவரும் பரமக்ருபையுடனெழுந்தருளியிருந்து கோஷ்டியைச் சிறப்பித்தது விசேஷித்துக் குறிப்பிடத்தக்கது.

பகவத்பக்தியும் பித்ருபக்தியும் ஆசார்யபக்தியும் பாகவதப்ரதிபத்தியும் வடிவெடுத்த இந்த ஸ்ரீ ராமாநுஜாசாரியர் மேன்மேலும் விசேஷ அபிவிருத்தியையடைந்து நீடூழி விளங்கத்தக்கவரென்று அனைவருடையவும் மங்களாசாஸனத்திற்குப் பாத்ரபூதர். நித்யஸ்ரீர் நித்ய மங்களம்.

... ... ...

—பத்ராதிபர்.

ஸ்ரீ

ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரக்ரந்தமாலையின் முதல்ஸம்புடம் வெளிவந்து ஒருமாதத்திற்கு மேலாயிற்றென்பதை அனைவருமறிவீர். இரண்டாவது ஸம்புடமும் சிலமாதங்களுக்குள் வெளிவரப்போகின்றதெனினும் மிக முக்கியமான காலக்ஷேப க்ரந்தங்களெல்லாம் இந்த ஸம்புடத்தில்தான் அடங்கியுள்ளன. ஆகவே இந்தமுதல் ஸம்புடமே முக்கியமான ஸம்புடமாகும். உபந்யாஸப் ப்ரக்ரியை மலிந்த இக்காலத்தில், முற்காலத்தில் போல் பூர்வாசார்ய க்ரந்தங்களை வைத்துக்கொண்டு தனியன்களஸேவித்து ஆசார்ய ஸன்னிதியில் பங்க்திஸேவித்து



வரியடைவே அர்த்தங் கேட்பதென்கிறபத்ததி குறையுற்றிருந்தாலும் அது ஆத்யந்திக லோபத்தை அடைந்து விடவில்லை. ஆங்காங்கு அந்த பத்ததியும் யதோசிதம் ப்ரசாரத்திலிருந்து வருவதால் அங்ஙனே காலக்ஷேபம் ஸாதிக்கும் ஸ்வாமிகளின் திருநாமங்களைத் தெரிந்துகொண்டு அவர்களுக்கு இந்த ஸ்ரீகோசம் சேரும்படி செய்து வருகிறேன், சிலர்க்கு விட்டிருந்தாலும் க்ரமேண சேர்ந்துவிடும்.

இங்ஙனம் பத்ராதிபர் P.B.A.

ஸ்ரீ

# ஸ்ரீமதுபயவே. கற்பூரம் பட்டப்பாஸ்வாமியென்கிற அ. க. வேங்கடாசாரியர் ஸ்வாமி

## (ஸ்ரீபெரும்பூதூர்)

ஸ்ரீ வைஷ்ணவவுலகில் இந்த ஸ்வாமியை யறியாதாரில்லை. ஸ்ரீ பெரும்பூதூர்க்குத் திலகமாக விளங்குகின்ற இந்த ஸ்வாமி இந்தத்திருவுருவப்படத்தில் மாலையணிந்து விளங்குபவர் நேற்று ஐப்பசியில் பேயாழ்வாருடைய திருவவதார நன்னாளாகிய சதய நக்ஷத்திரத்தில் திருவவதரித்தவர். அத்திருநன்னாளில் ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவம் (ஸ்ரீ பெரும்பூதூரில் தமது திருமாளிகையில்) கொண்டாடப்பெற்றார். உபயவேத பாரங்கதராய் ஆங்காங்கு திவ்ய தேசங்களில் மஹோத்ஸவ விசேஷங்களில் ஸேவைஸாதித்தும் உபய வேதகோஷ்டிகளையும்



அலங்கரித்தும் ஸர்வபூகஸாக்ஷ்ருத்தாய் விளங்குகின்ற இந்த ஸ்வாமியின் பெருமையைப்பற்றி இங்கு நாம் விசேஷித்துத் தெரிவிக்க விரும்பினால் அது ஸூர்யனைப் பரிசயம் பண்ணிவைப்பது போன்ற தோயாம். ஆயினும் ஸ்வல்பமே விவக்ஷிதம். ஸ்ரீ பெரும்பூதூரில் ப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த அஷ்டகோத்ரம் திருவேங்கட ராமாநுஜாசார்ய ஸ்வாமிக்குப் புத்ரரத்னமாய் ஜனித்தவிவர் அவ்வூர் வித்யாசாலையில் அத்யயித்துக் காவ்ய நாடகாலங்கார ப்ரவீணராகி உபய வேதங்களையும் முறையே அதிகரித்துச் 'செந்தமிழும் வடகலையும் திகழ்ந்தநாவர்' என்கிற திருமங்கையாழ்வாருடைய அருளிச் செயலுக்கு ப்ரதாநலக்ஷ்யமாய் விளங்குகின்றார். ஸ்ரீ பதரிகாச்ரம பர்யந்தமான அடியேனுடைய வடநாட்டுயாத்திரைகளில் பலமுறையும் ஸஹயோகமளித்த உசாத்துணையாயிருந்தவராதலால் இவருடைய ஆத்மகுண பரிபூர்த்தியை அதிகமாக அநுபவித்து அறியப்பெற்றவனடியேன். எம்பெருமானார் ஸந்நிதியில் பரம்பரையான கைங்கர்ய ஸம்பத்தியோடுகூட தம்முடைய யோக்யதா விசேஷ நிபந்தனமான கைங்கர்ய ஸம்பத்தையும்பெற்று யசஸ்வியாய் "பிதுச் சதகுண: புத்ர:" என்னும்படி வாழ்பவர்.

இவருடைய ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவத்தை சிஷ்யவர்க்கங்கள் உபய வேத பாராயணங்களுடனும் ஸ்ரீ பாஷ்ய பகவத்விஷய ஸேவைகளுடனும் மூன்றுநாள் சிறப்புற நடத்திவைத்தார்கள். அந்த ஸமயம் அவ்விடத்தில் பிள்ளைலோகாசார்யருடைய திருநக்ஷத்ர மஹோத்ஸவம் விசேஷமாக நடந்துகொண்டிருந்தபடியால் இந்த மணிவிழாவைப் பத்துநாள் நடத்தி யநுபவிக்க அவகாசமில்லாமற்போனது ஒரு பெரிய குறையேயாகும். இவருடைய பெருமைக்கும் கைங்கர்ய லக்ஷ்மிக்கும் தக்கவாறு எம்பெருமானார் ஸந்நிதியில் விசேஷ மரியாதைகள் நடத்தி வைத்தது குறிப்பிடத்தக்கது. இந்த ஸ்வாமியின் ஸ்வீக்ருத புத்ரரும் உற்றாருறவினரும் முன்னின்று இந்த மணிவிழாவை வெகு சிறப்பாக நடத்திவைத்தார்கள். திருவுருவப்படத்தில் இவர்க்கும் அடியேனுக்கும் இடையில் கம்பீரமூர்த்தியாக ஸேவை ஸாதிப்பவர் ஸ்ரீமதித்யாதி கீர்த்திமூர்த்தியான ஆஸூரி பெரியஸ்வாமியின் ஜ்யேஷ்ட புத்ர ரத்னமான (ஸ்ரீமதுபயவே. ஆஸூரி) ஸ்ரீநிவாஸாசாரியர்ஸ்வாமி. இந்த ஸந்தர்ப்ப விசேஷத்தில் அவருடைய திருவுருவமும் உலகுக்கு ஸேவைஸாதிக்கவாய்த்தது மஹாந்தான பாக்கியமென்று அமந்தாளந்த ஸந்தோஷ ஸந்துஷ்டம் விஜ்ஞாபனம். ஸ்ரீமதுபயவே. வித்வான். சித்ரகூடம் அஷ்டகோத்ரம் வேங்கடாசார்ய ஸ்வாமி போன்ற பல மஹான்கள் இந்த மணிவிழாவுக்ெழுந்தருளியிருந்து கோஷ்டியைச் சிறப்பித்ததும் தகுதியின்ற சிறப்பு. ஆசாஸிக்கவேண்டிய ஸம்ருத்திகளையெல்லாம் பெற்று நிகரில் புகழுடனே விளங்குமிந்த கற்பூரம்ஸ்வாமி] சீர்மலி வைபத்து நீடுழிற்க வேணுமென்று பல்லாண்டுபாடி நிற்கிறேன். ... [ப்ர—அ.]